# நூல் அறிமுகம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கிறுக்கல் பாகம் 1 |
| நூலாசிரியர் | : | விசு அய்யர் |
| முதற் பதிப்பு | : | 2021 |
| உரிமை | : | பதிப்பகத்தாருக்கு |
| கணினி அச்சு | : | மணி பதிப்பகம் |
| பக்கம் | : | 88 |
| நன்மதிப்பு | : | 60 |





புத்தகத்திற்கு தரும் விலை செலவு அல்ல. புத்தக கட்டமைப்புக்கு தாங்கள் தரும் தொகை அடுத்தபுத்தகம் படைக்க ஊக்குவிக்கும். புத்தகங்களை படியுங்கள். பரிசாக அளியுங்கள்

# பதிப் புரை

எல்லோருக்கும் நம் உணர்வுகளை சொல்ல வேண்டும் எப்படியாவது வெளியே சொல்ல வேண்டும் என்று நினைப்பார்கள். பெண்களிடமும் இந்த எண்ணம் உண்டு.. ஆனால் அதை அவர்கள் முறையாக தொகுத்து நூலாக வெளியிட மாட்டார்கள்.. பொதுவாக வம்பு பேசி தங்கள் உள்ள பகிர்வுகளை பகிர்ந்து கொள்ளுவார்கள்..

இந்த நூல் ஆசிரியர் தமது எண்ணங்களை இங்கே எழுதி தந்து இருக்கிறார்கள்.. இது வம்பு அல்ல எண்ணத்தில் வந்த சிந்தனைகள்.. ஒன்றல்ல இரண்டல்ல ஒவ்வொன்றும் ஒரு விதமாக பல செய்திகளை தொகுத்து "கிறுக்கல்" என பெயரிட்டு தந்து இருக்கிறார்கள்.

இது பொதுவான சிந்தனையில் அமைந்தா நூல் தான் என்றாலும், இதில் சொல்லப்பட்ட பல விஷயங்கள் ஒரு நிமிடம் நம்மை சிந்திக்க வைக்கிறது...

சொல்லப்பட்ட ஒவ்வொரு விஷயத்தையும் ஆசிரியர் இதனை சமூகத்தை தட்டி கேட்பது போல இலாவகமாக கையாண்டு உள்ளார். ஒரு குறிப்பிட்ட சாரார்களுக்கு மட்டும் என இல்லாத நடைமுறையில் தான் கண்ட அனுபவ நிகழ்ச்சிகளை இந்த நூலில் படைத்து தந்து இருப்பது நம்மையும் சிந்திக்க வைக்கிறது. அதனை நூலாக வடிவமைத்து தருவதில் மணி பதிப்பகம் பெருமை கொள்கிறது.

இந்த நூலின் ஆசிரியர் பற்றி அதிகம் சொல்ல வேண்டிய தேவை இல்லை. தன்னை அதிகம் வெளிக் காட்டிக் கொள்ளாத ஒரு அன்பர் என நல்லோர் பாராட்டும் பெருந்தகையர். இவரது சிந்தனையும் மற்றவர்களை ஊக்குவிக்கும் அணுகுமுறையும் நம்மை மகிழ்ச்சியில் ஆழ்த்தும்.

இன் நூலின் அட்டைப் பட வடிவமைப்பும் அழகுடன் செம்மை படுத்தி பதிப்பித்து தருவதில் மணி பதிப்பகம் பெருமை கொள்கிறது. இந்த நூல் வடிவைமைப்பிலும் சரி, எழுத்து பிழை திருத்தத்திலும் சரி, குறித்த நேரத்தில் வெளிவர நேரம் பாராது உறுதுணையாக இருந்த பதிப்பக ஊழியர்களை பாராட்டுவதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம்.

படிக்கும் பழக்கம் குறைந்து விட்டதற்கு காரணம் பல உள. அவற்றுள், தொழில் நுட்ப வளர்ச்சி சமூக வலைதல வளர்ச்சி என

இருக்கும் இந்த நிலையில், புத்தகங்களை வாங்கி அடுக்கி வைக்க இடம் இல்லாமை, பாதுகாக்க போதிய அவகாசம் இன்மை என்ற பல சூழலில் மக்கள் வசதிக்கு ஏற்ப இந்த புத்தகத்தினை மின் புத்தகமாக தயாரித்து தருவதில் மணி பதிப்பகம் தொழில் நுட்ப வளர்ச்சியுடன் வளர்ந்து வருவதில் பெருமை கொள்கிறது. இதன் அடுத்த வளர்ச்சியாக ஒலி புத்தகமாக (ஆடியோ புத்தகமாக) வெளிக் கொணர திட்டம் உள்ளது.

அன்பர்கள் இந்த புத்தகங்களை வாங்கி, பயன் பெற்று, தங்கள் கருத்துக்களை பதிப்பகத்திற்கோ நூல் ஆசிரியருக்கோ மின்னஞ்சலில் தெரிவிக்கலாம்..

பதிப்பாளர்.

புத்தகத்திற்கு செலவிடும் தொகை வாழ்வை வளமாக்க உதவும் ஒரு சிறந்த முதலீடு. மற்ற கேளிக்கை செலவுகளுக்காக செய்யும் தொகையை ஒப்பிடும் போது இது மிகுந்த பயனை தருவன. அதனால் மனம் நோகாமல் நல்ல

# அணிந்துரை



இந்நூலாசிரியருடன் அண்மையில் சில ஆண்டுகளாக பழக்கம் உண்டு.. இவரது சிந்தனைகள் மூலம் வித்தியாசமான எண்ணக் கருத்துக்களை படைத்து வழங்கி வருவது மகிழ்ச்சி அளிக்கிறது..

சோதிடம் ஆன்மிகம் வரி சட்டம் என பன்முகம் கொண்ட இவரின் கை வண்ணத்தில் மலர்ந்து வருகிறது இந்த *கிறுக்கல்..*

புத்தகத்தின் தலைப்பை பார்த்தவுடன் என்ன இந்த கிறுக்கல் என கேட்க தோன்றியது.. அதை படித்து பார்த்த பிறகு தான் மனதில் உதித்தது.. இத்தனை கிறுக்கல் நமது வாழ்க்கையில் கூட இருக்க முடியுமா என..

புரிதல் என்பதில் தான் வாழ்க்கையில் எத்தனை கோணல்.. அது குடும்பத்திலும் சரி.. கூடி வாழும் வாழ்க்கையிலும் சரி.. இப்படி ஒவ்வொரு சிந்தனைகளையும் அசை போட்டு பார்த்தால்.. கிறுக்கு தனமாக தான் இருக்கும்.. அதை கிறுக்காமல் இருக்க முடியாது தான்..

விசு அய்யரின் இந்த கிறுக்கல் ஒவ்வொன்றும் ஒரு வித்தியாசமான சிந்தனையை தருகிறது.. இதில் எனக்கு பிடித்த அந்த கிறுக்கல்.. புதியதாக வேலைக்கு போன அந்த பெண் வாங்கிய செல் போன் தான்.. அதை சொல்லும் விதம் அருமையாக இருந்தது அந்த கடைசி "பஞ்ச்" வரை அது என்ன என்றே தெரியாமல் இருந்தது..

பல நூல்களை படைத்து தந்த இந்த நூல் ஆசிரியரின் இந்த புத்தகத்திற்கு வாசகராக அணிந்துரை எழுதுவதில் எனக்கு அலாதியான மகிழ்ச்சி தான். காரணம் அதன் ருசி தான் வேறு என்ன.! அதுவும் மின் நூலாக வருவதினால் மொபைல், லேப்டாப் என எதிலும் எளிதல் காண முடியும். ஆடியோ புத்தகமாவும் Podcast வழியாக மனதை நிரப்பும்.

இந்த நூலை கண்ணுறும் அனைவரும் ஏதோ கிறுக்கல் என தள்ளி விடாமல் ஒரு முறை படித்து பார்க்க வேண்டும் என்று விரும்பி கேட்டுக் கொள்கிறேன்.

இரா. மணிகண்டன்
email:maniiyer73@gmail.com

# நூல் அறிமுகம்

| | |
|---|---|
| நூலின் பெயர் | கிறுக்கல்... |
| நூலாசிரியர் | விசு அய்யர் |
| முதற்பதிப்பு | 2020 |
| கணினி அச்சு ¬ பதிவு | மணி பதிப்பகம் |
| பக்கம் | 128 |
| எழுத்து | 12 புள்ளிகள் |
| நன்மதிப்பு | ரூபாயில் 65 |

# என்னுரை

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்

அனைத்தே புலவர் தொழில்

இந்த புத்தகத்தில் உள்ள சிந்தனைகள் முக நூல் பக்கங்களுக்காக எழுத தொடங்கியது.. ஆனாலும் ஒரு சில தவிர மற்றவை முக நூல் பக்கங்களில் பகிர வில்லை.. எனது தனிப்பட்ட குழு நண்பர்களுக்கு மட்டும் வாரம் ஒன்றாக பகிர்ந்து வந்தேன்.. அதனை தொகுத்து ஒரு புத்தகமாக போடலாமே என்று தான் இந்த புத்தகத்தை உங்கள் கைகளில் தவழ விடுகிறேன்.. இந்த புத்தக குழந்தையை உச்சி முகர்ந்து, கொஞ்சி மகிழுங்கள்..

ஒரு முறை படித்து விட்டு கை கழுவும் அந்த முகநூல் நல்ல சில நட்பை ஏற்படுத்திக் கொடுத்தது என்பதில் மாற்றுக் கருத்து இல்லை என்றாலும், இதனை முக நூல் பக்கங்களில் பகிர்ந்து இருந்தால் சில லைக் கிடைத்து இருக்கும். சில கமெண்ட் கிடைத்து இருக்கும்.. ஆனால் இன்னொரு முறை தேடிப்பார்ப்பவர்கள் எத்தனை பேராக இருக்க முடியும்..

இந்த கிறுக்கலில் வந்த சிந்தனைகள் பல நடை முறை அனுபவங்களில் கண்டது, சில படித்து வந்தது. எப்படி இருந்தால் தான் என்ன இந்த சிந்தனைகளை ஒன்றாக திரட்டி நூலாக்கி தைத்தால் தானே முட்டையில் விழுந்த விந்து கருவாகி காத்திருந்து உருவாகி நாம் அதை வளர்க்க அது நம்மை உயர்த்த என ஒரு சுழற்சி முறையில் வரும் தொடர் பயணமாக இருக்கும்..

அப்படி வளர்ந்தது தான் இந்த கிறுக்கல்.. மனம் விட்டு சொல்ல வேண்டும் என்றால் இந்த புத்தகம் தயாராகி சில ஆண்டுகள் ஆகிவிட்டன. இதற்கு புத்தக வடிவம் தேவை

தானா.. என்ற சிந்தனையிலேயே எடுத்து வைத்து விட்டேன்..

இதுவும் சென்ற ஆண்டு வர வேண்டியது.. தொடர்ந்து வந்த கொரானா ஒட்டிய அடைப்பினால் முட்டைக்குள் அடைபட்ட குஞ்சு போல, இப்போ பிரசவமாகி உள்ளது.. அடைப்புகள் சிந்தனைக்கும் முயற்ச்சிகளுக்கும் இல்லை தானே.. என்பதை சொல்ல இந்த வெளியீடு ஒரு சான்றாக இருக்கட்டுமே..

மற்ற சில புத்தகங்களை ஶ்ரீ ராம் பதிப்பகத்தார் வெளியிடும் போது இதனையும் வெளியிடலாமே என ஆலோசனை சொன்னார்கள். அந்த அடிப்படையில் இதனை வடிவைமைத்து நூலாக்கி விட்டேன்.

இந்த புத்தகம் வழக்கம் போல மின்னூலாக வருகிறது. அச்சு நூலாக இருந்தால் புத்தகத்தை அடுக்கி வைப்பதற்கும் பாதுகாப்பதற்கும் சிரமமாக இருக்கும்.. இப்படி மின் நூலாக வருவதால், இதனை எங்கும் எடுத்துச் செல்ல முடியும்.. **cloud** இல் சேர்த்து வைத்து விட்டால் எப்போதும் படித்து ஓய்வு பெறலாம்.. நான் பயணத்தின் போது மின்னூல் உடன் தான் இருப்பேன்.. அத்தனை சுலபம் இது. ஒரு சின்ன சிப்புக்குள் எத்தனைபுத்தகங்கள்...

இது கிண்டல், விக்கிபீடியா மற்றும் ஸ்கிரைப்டுவில் கூட கிடைக்கும்.. வாய்ப்பு உள்ளவர்கள் அங்கே படித்து பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். நண்பர்கள் உறவுகளுடன் பகிர்ந்து கொள்ளலாம்.

படிக்க நேரமில்லலை என்பவர்களுக்காக இது ஆடியோ புத்தகமாகவும் கேட்டு மகிழ முடியும். இணைப்பில் சேர்ந்து ஆடியோ புத்தகமாக கேட்க **https://Anchor.fm/visuonair** இல் இணைந்து கொள்ளுங்கள்.

எப்போதும் உங்கள் காதுகளில் இனிய குரலில் ஒலிவலம் வரும்.

புத்தகம் படிக்கும் பழக்கம் குறைந்து விட்ட நாளில் தொழில் நுட்ப வளர்ச்சி பெருகிவிட்ட இந்த சூழலில் இதனை வாய்ப்பாக பயன்படுத்திக் கொண்டு நல்ல சிந்தனையை தர வேண்டும். நாமும் வளர வேண்டும் அது உங்களுக்கும் சுலபாமகவும் பயன் தரும்படியும் இருக்க வேண்டும் என இப்படி செய்து உள்ளது.

இந்த புத்தகம் வெளிவர துணையாக இருந்த மணி பதிப்பகத்தாருக்கும், இந்த புத்தகத்திற்கு அணிந்துரை செய்து வாழ்த்துக்கள் வழங்கிய என் அன்புக்குரிய திரு . இரா.மணிகண்டன் அவர்களுக்கும் என் நெஞ்சம் எனும் மெய் தீட்டியில் நன்றியை பதிப்பு செய்கிறேன்.

எனது அன்புக்குரிய வாசகர்கள் வழக்கம் போல இந்த புத்தகத்தையும் வாங்கி ஊக்கப் படுத்த வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

அன்புடன்

விசு அய்யர்



# மாம்பழமாம் மாம்பழம்...

இங்கிருந்து
இரண்டு மாம்பழம் எடுத்துக்கோங்கோ



இந்த சீசனல்ல
இதை சாப்பிடாட்டி எப்படி ?

சுவையிலும் சரி
சொக்க வைக்கும் மனத்திலும் சரி

மாம்பழத்திற்கு ஈடு
மாம்பழம் மட்டுமே..

மாங்காய் வடு முதல் ஆவக்காய்
மாங்காய் வரை வீட்டில் இருக்கும் ஒரு ஆண்டு

எனினும் நமக்கு
என்னவோ இந்த மாம்பழ ஆசை விடுவதில்லை

பாதிரி மாம்பழம்
பழசானாலும் ருசிக்கும் என

தஞ்சை தோழர்கள் சொல்வார்கள்
தங்களுக்கு எப்படி இருந்தாலும்

மாம்பழத்தில் உள்ளது ப(ழ)ல ஜாதிகள்
மாம்பழத்தில் எனக்கு பிடித்தவை என

பட்டியலிட்டால் அத்தனையையும்
பகுதி பகுதியாக சொல்லலாம் எனினும்

என்னை கவர்ந்தவை
என சொல்ல வேண்டுமானால்
டஜன் கணக்கில் இருந்தாலும்
டாப் ஐந்து என பட்டியல் தருகிறேன்

இம்மாம் பசன்ந்த்
அல்போன்சா
ருமானி என்ற வரிசையில்
பங்கனபள்ளி மற்றும்
பெங்களூரா வரையில்

எங்கள் வீட்டு மரத்தில்
எப்போதும் பெங்களூரா அ கிளிமூக்கு

நிறைய காய்த்து கொட்டும் வீட்டை விற்றதால்
நினைவில் தான் இவையெல்லாம் இப்போது..

விலை கொடுத்து வாங்கும் போது பழம்
வீசும் மனத்தினால் அது ஒன்றும் பெரிதாக தெரியவில்லை

வைக்கோல் போட்டு புகை மூட்டி பழுக்க
வைத்த பழங்கள் இப்போ

கால்ஷியம் கார்பைடு (விஷ)கல்லை கட்டி
கனிய வைக்கிறார்கள் என்பது வருத்தம் தான்

சீசனில் வரும் பழம்
சீக்கிரத்தில் பழுத்து லாபம் சம்பாதிக்க

இப்படி ஒரு மாற்று சிந்தனை
இந்த வியாபாரிகளுக்கு

அம்மாவுக்கு பிடித்த பழம் மாம்பழம் என்பதால்
அன்பு வட்டத்தில் இருக்கும் அத்தனை பேருக்கும்

மாம்பழம் வாங்கி தருவது வழக்கம் அந்த நினைவில்
மாம்பழம் பற்றி உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்



# எதை விற்பது...?

பள்ளி வாசலில் ஒரு
பல் இல்லாத கிழவி

வயிற்று பிழைப்புக்காக திண்பண்டம்
விற்றுக் கொண்டிருந்தாள்...

காரில் வேகமாக வந்து இறங்கிய
கணவான் பள்ளியின் தாளாளர்

இங்கெல்லாம் கண்டதையும் விற்கக் கூடாது
இனி மே இந்த பக்கம் வரக் கூடாது

எந்திரிச்சுப்போ என்று கோபம் கொப்பளிக்க
எடுப்பான தோரனையில் மிரட்டினார்

''ஒ படிப்பை மட்டுந்தா விக்கணுமா'' என
ஒப்பாரி குரலில் நா தளுக்க சொன்னாள்

அந்த நெல்லிக்கா விற்கும் பாட்டி
அப்படியே கலங்கி போனது மனது....



# பிள்ளைகள் படிக்கவில்லையா..?




பள்ளி பிளஸ்டு தேர்வு வந்தாச்சு
படித்தவர் முதலிடம் செய்தி படிச்சாச்சு

முதல் மதிப்பெண் 1200க்கு 1180. எடுத்த
மாணவருக்கு சொல்லிக் கொடுத்த

ஆசிரியர் கூட நிச்சயமாக இப்படி
அசத்தலாக இத்தனை மதிப்பெண்

வாங்கி இருக்க மாட்டாரு பிறகு
வாங்கிய இந்த மதிப்பெண்கள் எப்படி.. ? யோசித்ததுண்டா ?

தமிழில் ''ண'' , ''ன'' எப்போது போட வேண்டும் என
தப்பில்லாமல் சொல்லும் மாணவர்களை காட்டுங்கள்

மார்க்கு வாங்க கூடிய கேள்விகளை மட்டும் படித்து
மதிப்பெண் வாங்கி மற்றவர்களை
மக்கு எனும் இவர்கள் கோழைகள்

இவர்கள் அறிவு பேப்பரில் பெற்று இருக்கும்
இவ்வளவு மதிப்பெண்ணோடு சரி..

ஒரு சிலரை அடையாளம் காட்டி
ஓகோன்னு வந்தவர் இவரு என சொல்லாதீர்கள்...

GV பட்டய கணக்காளர் Chartered Accountant
சிறந்த திரைப்பட தயாரிப்பாளர்

நம்ம அஜித் பொறியாளர்
நல்லா தெரியும் ''தல'' ன்னு சொன்னாலே

விதிவிலக்கு எல்லாம்
விதி அல்ல என்று ஒரு விதி உண்டு

என்னுடைய எண்ணமெல்லாம்
எப்படியும் பாஸாகனும்னு

உழைத்து களைத்த
உத்தமர்களை பற்றியதே...

இவர்கள் இப்படி மதிப்பெண் பெற காரணமே
அவர்கள் அந்த மதிப்பெண் பெறாததனால் தான்..

கல்வி வேறு அறிவு வேறு நாம்
கல்விக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வரை

கட்டாயமாக நாட்டில் வறுமை நிலவும்
காசுக்காக மட்டுமே கல்வி விற்கப்படும்

விலை போட்டு வாங்கவா முடியும் என
விவரமான கவிஞர் கேட்டுவிட்டு போனார்  இப்போ

கல்வியை விலை கொடுத்து(த்தான்) வாங்கும்
கட்டாயத்தில் இன்றைய சமுதாயம்

இந்த கல்ஊரியில் இந்த படிப்புக்கு
இன்ன விலை என வெளியிலும் உள்ளேயும் பேரம்

நடக்காமல் இல்லை... அனுமதிக்காக மாணவர்கள்
நடந்து நடந்து சோர்ந்து போனதும் உண்டு

முதல் மதிப்பெண் வாங்கியவர்களை
முன்வரிசையில் நிறுத்தும்

ஊடகங்கள் முதலில் இதை நிறுத்த வேண்டும்
ஊர் முழுதும் படிக்காத மேதைகளை

அடையாளமிட்டு காட்ட வேண்டும் இனி இப்படி
அந்த ஊடகங்கள் செய்தால் தான் வளர்ச்சி தேடிவரும்

முழு வெற்றியை காண்பிக்க பல இடங்களில்

முழுமையாக படிக்காமலே பலருக்கு கூஊ வழங்கப்படுகிறது

அறிவுள்ளவர்களை வெற்றியாளர்களாக்கும் இவர்களுக்கு
அறிவு என்பது எது என தெரியுமா தெரியவில்லை

எடிசன் பள்ளி படிப்பை முடிக்காதவர்
என்னவெல்லாம் கண்டுபிடித்துள்ளார் தெரியுமா

பில்கேட்ஸ் பள்ளி படிப்பை முடிக்காதவர்
பார் புகழும் பணக்காரர் பட்டியலில் இவர் இன்று

ஆப்பிள் முதலாளி ஸ்டீவ் ஜாப்ஸ்
அவரும் பள்ளிப் படிப்பை முடிக்காதவர் தான்

அவர் இல்லை என்றால் இனி நம் கையோடு உறவாடும்
அந்த ஆறாவது விரல் இல்லாமல் போயிருக்கும்

சரியாக படிக்காதவர்... படிக்காத மேதைகளை
சட்டென அடையாளம் காட்டி

அவர்களை ஊக்கப்படுத்தவேண்டும்
அதை விட்டுவிட்டு வெற்றி பெற்றவரை பாராட்டி

வாழ்த்து சொல்வது முக்கியமல்ல சரியானதும் அல்ல
வாழ்த்த வாருங்கள் தோல்வி அடைந்தவரை

அல்லது பின் தங்கியவர்களை
அது தான் நாம் இவர்களுக்கு
செய்ய வேண்டிய ஊக்க செயல்



# கடன்.. எப்போது அடையும்?

விவசாய கடன் சில
வருடங்களில் அடைந்து விடும்

வீட்டுக்கடன்
விரைவில் அடைந்து விடும்

இருபது அல்லது அதிகபட்சமாக
இருபத்தைந்தாண்டு ஆண்கள் தான் ஆனால்

குடும்ப கடன் எத்தனை
கும்பிடு போட்டாலும்

உயிர் போகும் வரை
உடனேயே வரும்..

பெரியது என குறிப்பிட "மா" என்ற
பெயர் சொல் தமிழில் உள்ளது

'மா'ம்பழம்
'மா'நகர்

அம்'மா' என்பது போல
'மா'ப்பிள்ளை என்பதும்

பிள்ளையை மாப்பிள்ளையாக்குவதே
பிணையமாக சாகும் வரை உள்ள கடன் தான்

இன்றைய இளைஞர்களுக்கு
இப்படி ஒரு செய்தி சொல்கிறேன்

இளைஞர்கள் பலருக்கு திருமணம் கூடி வரவில்லை
இப்போ என்ன அவசரம் என்றவர்கள் கூட

வலைபோட்டு தேடுகின்றனர் தம் துணையை
வலைத்தளத்தில் கூட இல்லை..

மன்னியுங்கள் இந்த சிறுவனை...
மனம் திறந்து சொல்கிறேன்

உங்கள் திருவடிகளாக நினைத்து
உங்களிடம் நிபந்தனையற்ற மன்னிப்பு கோருகிறேன்...

மன்னித்து உதவுக...
மனம் கொண்டு பொறுத்து அருள்க..

இது போல மன்னிப்பு கோரும் நாள்
இன்றும் ஜெயினர்களால் கடைபிடிக்கப்படுகிறது

“மிர்ச்சாமி துக்ராம்” என்று பழகிய
மக்களிடம் சொல்வார்கள்...

அப்படியே நாமும்
அன்போடு சொல்லிக் கொள்வோம்



# இறந்தவர்களுக்கு திதி தரணுமா

மந்திரத்திற்கு காசு என்ற நிலை
மாறி காசுக்கு மந்திரம் என்றாகிவிட்டது

அய்யர் என்னும் புரோகிதர்கள் இப்போ
அப்படி இல்லை அது தொழில் என்றாகிவிட்டது

நிதியமைச்சகம் கவனத்தில் இது
நிழலாடவில்லை என கருதுகிறோம்

சேவை வரி புரோகிதத்திற்கும் போடவேண்டும்
சேவை என்ற வரைமுறையில்

இவரது பணிகள் வருவதால் நிச்சயம்
இந்த புரோகித பணிகளுக்கு சேவை வரி அவசியம்

முன்பெல்லாம் பூமி தானம் தருவார்கள்
முக்கியமான பிராமணர்களுக்கு கூடு கிடைக்கும்

அரிசி வாழக்காய் தருவார்கள்
அண்ணதானம் தருவார்கள்...

அய்யர்மார்கள் எல்லாம் இப்போ
அவரவர் பிள்ளைகளை மேல்படிப்புக்கு மட்டுமல்ல

நாகரீக உடையில்
நட(ன)மாடுவதை விரும்புகின்றனர்/ரசிக்கின்றனர்

முக்கியமான கோவில்களில் பணிபுரியும்
முதன்மை குருக்கள் முதல் அனைவருக்கும்

தட்டில் கிடைக்கும் சன்மானம் தினமும்
தட்டுப்பாடு இல்லாமல் கிடைக்கிறது

காசு கொடுத்தால் பிரசாதம்

கொடுக்காவிட்டால் அலட்சியம் என

பாரபட்ஷம் பார்க்கும் சிலரும் உண்டு
பாவப்பட்டவர்கள் பாவமாய் வருவார்கள்

பணம் தான் எல்லாம் என்றானதாலே
பாசம் கூட பணம் கொடுத்தால் கிடைத்துவிடுகிறது

பணம் வாழ்க்கைக்கு முக்கியம் தான் ஆனால்
பணமே வாழ்க்கையில்லை என அறியாதவர்கள்

பணத்தை பெற்ற பின் தான் அறிகின்றனர்
பாசமானவர்கள் அப்போ அவர் அருகில் இருப்பதில்லை

பணம் சம்பாதிப்பது மிக மிக சுலபம் ஆனால்
பணத்தை செலவு செய்வது தான் கடினம்

நம்மவருக்கு என்ன ஆசை தெரியுமா
நாம் சம்பாதிக்கும் பணம் அவரைப்போல

சம்பாதிக்கவேண்டும் என்பது தான்
சரி என்றால் அவரைப் போல வாழ பழக வேண்டாமா

போராட்டமில்லாத வாழ்க்கை வாழ
போரடிக்கும் பணம் துணைபுரியாது

பூந்தோட்டமான வாழ்க்கைக்கு அது
புத்துணர்ச்சி தராது எனினும்

பணத்தை பற்றி பேசினாலே
பற்றி எரிகிறது என்பவர்கள் கொஞ்சம் இளைப்பாறுங்கள்



# காரடையான் நோன்பு

மார்ச்சு மாதம்  காரடையாண் நோன்பு
மாசி பங்குனியில் வரும் இந் நோன்பு

மாங்கல்ய பலத்தை பெற்றுத் தரும் என்பது
மக்களின் நம்பிக்கை.. குறிப்பாக பிராமண குடும்பத்தில்

அது சரி..

அதெல்லாம் இப்போ மாறிப் போச்சு
கலப்பு திருமணங்கள் பாதி

கல்யாணம் பண்ணிய பின்னரும்
விவாகரத்தில் பாதி என

வீதியில் குடும்பபம் நடத்துது  இந்த பிராமண சமூகம்..
எனக்கு தெரிந்த ஆச்சாரமான ஒரு குடும்ப பெண்

என்ன காரணமும் சொல்லாமல்
பதினைந்து ஆண்டுகாலம்

பத்தினி வாழ்க்கை வாழ்ந்து விட்டு
காரணமே இல்லாத காரணத்தை காட்டி

கல்யாணத்தில்
கட்டிய தாலியை கழற்றி

விவாகரத்து செய்து கொண்டிருக்கின்றாள்
விவரமாக சொன்னால் சிரிப்பாக இருக்கும்

நாற்பத்தைந்து வயதிற்கு பிறகு
நான்கு முறை விவாகரத்து செய்த ஒருவரை

திருமணம் செய்து கெண்டிருக்கின்றாள்
திரும்பி பாருங்கள் இதெல்லாம் சகஜம் என்பவர்கள் கேட்க

பதினைந்து ஆண்டு வாழ்ந்தது வாழ்க்கையில்லையா
படக்குன்னு தாலியை கழற்றும் தைரியம் யார் தந்தது

பெரியவர்கள் முன்னிலையில்
பெருமை பொங்க வேதம் முழங்க சொன்னதெல்லாம்

அய்யர் குடும்ப பெண்கள் இப்படி செய்வது
அசிங்கமாக மட்டுமல்ல... அவமானமாகவும் இருக்கிறது

அய்ம்பது வயதில் திருமணம்
அய்ந்தாவது மனைவியாக அவருக்கு

காரணம் ஆராய்ந்தால்
காசு பணம் தான் என்பது தெளிவாக தெரியும்

முன்னாள் கணவர் என்றாலும்
எந்நாளும் அவர் தான் இவளுக்கு கணவர்

இப்போ இவள்

“இவருடன் வாழ்க்கை” நடத்துகிறாள் என்று தான்
சொல்ல வேண்டும் அப்படி கௌரவமாக

சொல்வதன் பொருள் புரிகிறதா... ?

முன்னவரிடம் காசு பங்களா இல்லை...
முதல்வனாக இருக்கும் இவரிடம் எல்லாம் இருக்கு..

இப்படிப்பட்ட ஒரு வாழ்க்கை வாழ்வது
இவருக்கு அழகல்ல.. இந்(து)த சமூகத்திற்கும் அழகல்ல..

இவர் தனித்து வாழ்ந்திருந்தால்
இந்த உலகம் இவருக்கு தலை வணங்கியிருக்கும்

இவர் அவரோடு வாழ்ந்திருந்தால்
இந்த தலைமுறை அவரை வணங்கி இருக்கும்..

இவர் அவர்களை எல்லாம் மறந்து மறைத்து

இப்போது ஐந்தாவது மனைவியாக

இன்னொருவருடன் வாழ்வது
இவரின் கோழைத்தனத்தையும் ..

சோகமான முடிவையும் அறிவிக்கின்றது..

சும்மா சொல்ல வேண்டுமானால்

பிராமண சமூகத்தை குறிப்பாக வெளிநாடுகள்
பிரமிக்கும் இந்திய குடும்ப கலாச்சாரத்திற்கு வந்த

புல்லுருவிகள் இவர்கள் என்று தான் சொல்ல வேண்டும்
புதல்வர்களை பெறாத அவர்கள் வாழ்க்கையை வாழும்

இவர்கள் குடும்ப பெண்கள் என்ற பட்டியலில்
இருந்து நீக்கப் பட வேண்டும்...

காரடையாண் நோன்புகள் இவர்களுக்கு ஒரு
கேலிக் கூத்து தான்...

விவாகரத்து சரியா தவறா என்று
விவாதிப்பதை விட
இந்த பெண்ணின் செயல் சரியா என

இப்போது சிந்தித்து பாருங்கள்..

நம்மை சேர்ந்தவர்கள் எத்தனை உயர்ந்தவர்கள் என
நமக்கே தெரியும்.. பிராமணர்கள் விட நாம் உயர்ந்தவர்களே..



# ஆன்லைன் ஷாப்பிங்.

ஆன்லைன் ஷாப்பிங் தெரியுமா ?
ஆத்துக்குள்ள கடையை கொண்டு வர்றது தானே

ஆன்லைன் பாங்கு என்பது நம்மளுடைய
அறைக்கு வங்கியை கொண்டு வருவது தான்

பணம் எடுக்கனும்னா போங்குக்கு போன காலம் மாறி
பணம் வேணும்னு போன் பண்ணினால்

வீட்டு வாசல்ல ஒருத்தர்
வேண்டிய பணத்தை தர காத்திக்கிட்டு இருக்காரு..

கடன் வாங்க கூட பேங்குக்கு போக வேண்டாம்
காசை பாங்கில போட்டுட்டு நுஆஜயில வசூல் செய்யறாங்க

ஆனால் பாருங்க எத்தனை முறை சொன்னாலும் நம்ம
அம்மாமாருங்க கேட்க மாட்டீங்கிறாங்க...

பிள்ளைகளை பள்ளிக் கூடத்தில சேர்க்க
பசி உறக்கம் விட்டுட்டு பள்ளியை தேடி ஒடுறாங்க

300 நாட்கள் படிச்சதை
3 மணி நேரத்தில எழுதி இவுங்க

நம்மள படிச்சவன்னு
நமக்கு பட்டம் கொடுக்கப் போறாங்களாம்

படிப்பு வேறு அறிவு வேறு
பதறாம கேளுங்க சொல்ல வர்ற விஷயத்தை

பெற்றோர்களுக்கு ஒரு ஆலோசனை
பத்தி எரியுதுன்னு திட்டாதீங்க...

உங்க பிள்ளைகளை பள்ளியில் சேர்க்காதீங்க
உங்க பிள்ளைகள் அறிவாளிகள் தான்

அவர்கள் அறிவாளிகளாகவே வ(ள)ரட்டும்
அவர்களை பள்ளியில் சேர்த்து முட்டாள்களாக்காதீர்கள்

ஆண் பிள்ளையாக இருந்தாலும் சரி
அல்லது பெண் பிள்ளைகளாக இருந்தாலும் சரி

அவர்களை இப்போ
ஆன்லைனில் படிக்க வையுங்க...

ஒழுக்கத்தை கற்றுக் கொள்ளத்தான் முன்பெல்லாம்
ஒழுங்கா பள்ளிக்கு போக நம்மள தயார் பண்ணுவாங்க

பள்ளிகளிலேயே ஒழுக்கம் இல்லேன்னா...
பாவி மனசு பத்திக்கிட்டு தானே வரும்...

நல்ல சிந்தனையும் இப்போதெல்லாம்
நல்லொழுக்கமும் உள்ள ஆசிரியர்கள் குறைவு

இருக்கும் சிலரை நிர்வாகம் கவணிப்பதில்லை என
இவர்களுக்கும் வருத்தம் ....

படித்தவன் பாடம் நடத்துகிறார்
படிக்காதவன் பள்ளிக் கூடம் நடத்துகிறார்

என்று ஒரு கவிதை
எப்போது படித்தது நிழலாடுகிறது...

ஆன்லைன் ஷாப்பிங்
ஆன்லைன் பேங்கிங் போல

ஆன்லைன் பாடத்திற்கு
அவர்களை தயார் படுத்துங்கள்...

கணினியை முழுமையாக பயன் படுத்தி
கண்டெடுங்கள் உங்கள் பிள்ளைகளிடம் உள்ள கொளம்பஸ்ஸை

ஒரு தகவல் சொல்லட்டுமா... கம்ப்யூட்டர் என்று
ஒருக்காலும் கிடையாது நாங்கள் படிக்கும் போது

ஆன்லைனில் தான் நான் கம்ப்யூட்டர் படித்தேன்
ஆஹா என பாரட்டுமளவுக்கு இப்போ எனக்கு

கம்ப்யூட்டர் அறிவு இருக்கலாம் சாதராண
கம்ப்யூட்டர் பயன் பாடு அல்ல

சோடோகோட் லாஜிக் நேவிகேஷன் என
உயர் நிலை மென் பொருள் வரை அத்துப்படி..

ஆன்லைனில் படிக்க வைப்பதால்
அவர்களுக்கே தானே ஆர்வம் வரும்..

அறிவுரை பெறுவதை இன்றைய இளசுகள்
அனுமதிப்பதில்லை அதனால் பள்ளிகள் தேவையில்லை

பள்ளிகளை இடித்து ஷாப்பிங் மால்களாகவோ
பயன் உள்ள மற்றவைகளுக்கோ வைத்துக் கொள்ளலாம்

இன்னமும் வருத்தமாக சொன்னால்
இங்கே சில பள்ளிகள் நட்டத்தில் நடந்து கொண்டிருக்கிறது

எல்லாம் இலவசம்
என அரசு அறிவிப்பதால் பல

பள்ளிகள் நிர்வாகம் செய்வதில்
பல சிக்கல்கள் இருப்பதாக செய்தி...

எது எப்படி இருந்தாலும்
எங்கே உங்க காதை கொடுங்க..

உங்க பிள்ளைகளை பள்ளியில் கல்ஊரியில் சேர்க்காதீங்க
உபயோகமாக அவர்கள் வ(ள)ர அவர்களை

ஆன்லைனில் படிப்பில் சேர்த்து விடுங்கள்

அட்மிஷன் பிரச்சனை இல்லை

கவுன்சிலிங் இல்லை, பெரிய தலைகளுக்கு
கட்டிங் கொடுக்க தேவையில்லை...

நாளைய தலைமுறைகளை
நல்லவர்களாக பிள்ளைகளை

தயவு செய்து பள்ளிக்கு அனுப்பாதீர்கள்...
தரமான சமூகத்தை உருவாக்க தொடங்குங்கள்..

தெருவெல்லாம் சொல்லி வைப்போம்
தொடருங்கள்.. என்னோடு...



# கெடுத்தது யாரு..

இளைஞர் கெட்டுபோக காரணம்
இப்படி மீடியா கெட்டு போச்சு என

காரணம் சொல்பவர்கள்
கட்டாயம் சினிமாவை சொல்லாமலிருப்பதில்லை

விரசமான பாடல் என்பவர்கள்
விவரமாக திரும்பி பாருங்கள்

அன்றைய பாடல்களிலும்
அந்த விரசம் இருந்த்தது

வெளிப்படையாக இல்லை எனினும்
வெள்ளித்திரையில் இது இல்லாமலில்லை

இன்று அப்படி ஏன் கவிஞர்கள் எழுதுவதில்லை
இது பற்றி சிந்தித்த்துண்டா% ?

அப்படி எழுதும் கவிஞர்கள் இருக்கிறார்கள்
அவர்களுக்கு சினிமாவில் வாய்ப்பு கிடைப்பதில்லை

வாய்ப்பு கிடைத்தவர்களுக்கு எழுத்தெரியவில்லை
வார்த்தைகளுக்கே பஞ்சம் ல..லா..ல்ல போடுகிறார்கள்

கிரியடேவிட்டிக்கு பஞ்சமில்லை%
கிரியேடிவிவ் மக்களுக்கு வாய்ப்பு இல்லை

மாற்றங்கள் தான்
மாறுதல்களை கொண்டுவரும்

திருடர்கள் கேட்டார்கள்
திரும்பவும் அரசியலுக்கு வந்து குறை சொல் என

ஜெயித்து விட்டு பேசு என

ஜாலியாக இருக்கும் அவர்கள் சொன்னார்கள்

ஜெயித்து வந்த பின்னரும் மெஜாரிட்டி கேட்டு
ஜன் லோக் பால்லுக்கு கை கொடுக்க வில்லை

ராஜினாமா செய்து விட்டு மீண்டும்
ராஜ்ஜியத்தை பிடிப்பேன் என்ற போது

வேறு வழியாக சிரித்தார்கள்
வேலையில்லாதவர்கள்

நாற்பத்தொன்பது நாளில்
நம்பிக்கை இழந்த்தாக கூச்சலிட்டனர்

நிலை இப்போது
நிறமாறியது..

மோடி ஆட்சிக்கு யாரும்
மோகிக்க வில்லை..

கெஜ்ரிவால் என்ற இளைஞன் இன்று
கெத்தாக நிற்கும் போது

கலைத்துறை மட்டும் என்ன
கண் பட்டுவிடுமா%

பழைய படத்தின் பெயர் வைக்கும்
பழக்கத்தை மாற்றுவோம்

கதை புதிது சொல் புதிது
கருத்து புதிது என

மாற்றங்களை கொண்டு வருவோம்
மறுபடியும் கலைத்துறைக்கு புத்துயிர் தருவோம்

# நாம் செய்த தவறு...

நாம எப்படி இருந்தோமோ அப்படி
நம்ம பிள்ளைகளை "நாம" இருக்க விடறது இல்லே

அன்றைய இளைஞர்கள் படிக்கும் போது
அன்று சமஸ்கிருதத்துடன் தமிழையும் படித்தனர்

தொடர்ந்து வந்த தலை(முறைகள்)
தொலைத்தது சமஸ்கிருதத்தை

இன்றைய நாளில் (வருத்தமில்லாமல்)
இவர்கள் தமிழையும் தொலைத்து விட்டனர்

முன்னர் விளையாடுவதற்கு கூட
முதல் கடவுளான விநாயகர் பொம்மை தருவார்கள்

இவர்களுக்கு இந்த அன்றைய
இளைஞர்கள் துப்பாக்கியை (வாங்கி)தருகிறார்கள்

வன்முறைகளை பிஞ்சுகளில் (நஞ்சு கலந்து)
வளர்க்க இந்த பெரிசுகளே காரணம்

சட்டசபை விளையாட்டுகளை பிள்ளைகள்
சாலைகளில் விளையாடுகின்றனர் (நாளைய அரசியல்வாதிகள்)

என்னத்தை சொல்லி
என்ன செய்ய..

எடுத்த எடுப்பிலே இவர்களுக்கு
எழுபது ஆயிரம் சம்பளம்

அது சரி முதல் மாத சம்பளம் வந்ததும்
அப்படி என்ன செய்யப் போறீங்க என

இளைஞர் ஒருவரிடம் கேட்டதற்கு கிடைத்த பதில்

இது தான்.. நம்மை சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்தது

நமக்கு சூவிட் வாங்கி தரப்போரா என பார்த்தால் அவர்
நான் கடன் வாங்கப் போறேன் என பதில் தருகிறார்..

இப்படித்தான் இந்த இளைஞர்கள்
இன்று மூலையை மூளையில் போட்டு விட்டு

விலை கொடுத்து
வினையை வாங்கி தள்ளுகிறார்கள்..

முதல் மாத சம்பளத்தில் ஒரு பெண்
முழுசா ஒரு பெரிய தொகை

இதற்கு செலவு செய்துட்டா அட
இதுவான்னு யோசிக்கிறப்போ அவளின்

அம்மா சொல்கிறார்
அழுது கொண்டே ..

இந்த தொகை யிருந்தால்
இவளோட கல்யாணத்திற்கு

இரண்டு சவரன் நகையாவது
இப்போ விலையில் வாங்கியிருக்கலாம் என்றாள்

இந்த தொகை யிருந்தால் (அவள் அப்பா)
இவ தங்கையோட படிப்புக்கு பயனாகும் என்றார்

இவள் தங்கேயோ எதை வேணும்னா வாங்கிக்கோ
இப்போ "இதை எனக்கு தா" என வாயில் விரல் சூப்பியபடி

அது சரி
அவள் என்ன தான் வாங்கினாள் என கேட்கிறீர்களா ?

அதை சொன்னால் தானே
அந்த க்ளைமாக்ஸ் தெரியும்

அவள் வாங்கியது
அழகுநிறைந்த புதிய மாடலாக வந்த

செல்(ல) ஃபோன்
செயலி என தமிழில் சொன்னாலும்

அதன் விலை கொஞ்சம்
அதிகம் தான்..

இது அவசியமா (பயனடிப்படையில் அல்ல)
இந்த மாற்றம் சரி தானா ?

சிந்திக்க சில என
சிந்தித்துப் பாருங்கள்



# சர்க்கரை மீது அக்கறை

“நல்லா யிருக்கீங்களா ?” என
நலம் விசாரித்த காலம் போச்சு..

சர்க்கரை எப்படி இருக்கு என
சாதாரணமாக கேட்க வேண்டி இருக்கு

சர்க்கரை மீது அத்தனை
அக்கறை இப்போ நமக்கு..

என்னத்தை சாப்பிடறது
என ஏங்கி தவிக்கும் வயதான காலத்தில்

வாய்ப்பூட்டு போட்டு விடுகிறது
வாழாம போற இந்த சர்க்கரை..

சந்தோஷமான செய்திக்கு
சர்க்கரை இனிப்பு தருவது

இதுக்கு தான் என
இப்போ தான் புரியுது..

சர்கரை வியாதி தனியா வராது
சதுரம் கட்டிக்கிட்டு வரும்

இதய நோய்..இன்னமும்
இருக்கு கொலஸ்ட்ரால் மற்றும்

கண் நோய்(diabetic retina)
கவணத்தில் வைக்க வேண்டிய கிட்ணி என

ஒருசேர எல்லா நோயும் கூட்டிக்கிட்டு
ஒரு கூட்டுக் குடும்பமே நடத்தும் இந்த உடம்புல

வெள்ளை விஷம் பட்டியல்ல இப்போ
வெள்ளக்காரங்க அரிசியையும் சேர்த்துட்டாங்க

ருசியா சாப்பிட்டு பழகினவங்களுக்கு
ரசிச்சு சாப்பிட ஏதாவது கொடுத்தே ஆகனும்..

கொண்னுடுவாங்க இல்லாட்டி அதனால
கொறிக்க அவங்களுக்கு இத்துடன்..

கொண்டை கடலை
மூக்கு கடலை என சொன்னால்

தெரியாத பலருக்கும்
தெரியும் சர்க்கரை வியாதி கடலைன்னா

அதை அப்படியே உங்களுக்கு
அன்போடு தருகிறோம்..

அதோடு வர கொத்தமல்லியையும்
அடுப்பங்கரையில் உள்ள வெந்தயத்தையும்

சிவக்க வறுத்து ஆறியபின்
மிக்சியில் பொடித்து..

காபி டீக்கு பதில் ஒரு ஸ்பூன் போட்டு
கலக்கி குடிச்சுருங்க..

சர்க்கரையின் அளவு குறைந்திருக்கும்
சத்தியமா பின் விளைவுகள் இல்லே

காய்கறி அதிகமா எடுத்துக்கனும்
கட்டாயம் நடைப்பயிற்சி என

மற்றதெல்லாம் உங்களுக்கு தெரிந்ததுதான்
முக்கியமாக தாழ்நிலை சர்க்கரை வராம பார்த்துக்கோங்க



# கட்டிடம் இடியலாம்..
# கனவுகள் இடியலாமா?

இடிந்து விழுந்தது சென்னையில் ஒரு கட்டிடம்
இடி தான் காரணம் என்கிறது நிர்வாகம்

இயற்கை சூழல் என்ன செய்ய
இங்கு வீடு வாங்கியவர் நிலை என்ன ?

இப்படி பல விதமான குழப்பங்களும்
இன்ன பிற விஷயமும் இருந்தாலும்

உயரமான கட்டிடங்கள்
உகந்ததா தமிழகத்திற்கு என

அச்சம் நிறைந்த நமக்கு
ஆசை இல்லாமல் இல்லை

பணம் கொடுத்து வீடு வாங்கியவர் நிலை என்ன ?
பணத்தை கடனாக வாரி தந்த வங்கிகள் எங்கே ?

இத்தனை செலவு செய்து
இதனை விற்றுத் தரும் நிறுவனத்தின் நிலையென்ன ?

மீண்டும் இந்த இடத்தில்
மறுபடியும் கட்டி தந்தாலும்

வாங்கி குடியிருக்க மனம்
வருமா நம் மக்களுக்கு ?

ஆனாலும் சற்று பின்நோக்கி பார்க்கையில்
ஆச்சரியமான சில தகவல்கள் நிழலாடுகின்றன

இது சரிதானா
இப்படி சொல்லலாமா என தெரியாது

சோதிட நண்பர்கள் இந்த கோணத்தில்
சிந்தித்து தகவல் தந்தால் அது

மக்களுக்கு நல்லது செய்வதோடு மட்டுமல்ல
மனதுக்கு ஆறுதல் தரக்கூடியதாகவும் இருக்கும்..

அது..

முதல் பெண் தமிழக முதல்வராக உள்ளவர்
முன்னாளில் ஆட்சியில் இருந்த போதும்

இது போன்ற பேரிடர்கள் நடந்துள்ளன
இவர் ஆட்சியில் இருக்கும் போது மட்டுமே

இப்படிப்பட்ட பேரிடர்கள் நடந்து தமிழகத்திற்கே
இன்னல்களை தந்துள்ளது

சுனாமி நடந்தது இவர் ஆட்சியில் தான்
ஸ்கூல் பிள்ளைகள் தீயில் கருகியதும் இவர் ஆட்சியில் தான்

இப்போ இந்த கட்டிட இடிந்ததும்
இவர் ஆட்சியில் தான்

அடுத்து ஒரு மிகப் பெரிய விபத்தும்
அடுத்தடுத்து நடக்கலாம் அது

சென்னையில் நடந்து வரும்
சென்னை மெட்ரோவினால் இருக்கும்

சென்னை விமான நிலையத்தில்
சுமார் 20 முறை இந்த அம்மையார்

ஆட்சி பொறுப்பேற்றதில் இருந்து
அடுத்தடுத்து நடந்தேறியுள்ளது

விபத்துக்கள் என்றால்
ஆபத்து தான் என்பது பொதுவான செய்தி

ஆனாலும்
அடுத்தடுத்து இது போல் என்பதினால்

அரசியலாக்க எழுதவில்லை
அனைவரும் அறிந்து கொள்ள

சோதிட ரீதியாக ஏதோ உள்ளது என
யோசிக்க முடிகிறது.. இப்படி சிந்தித்து

உங்களுக்கு ஏதாவது புலன் பட்டால்
உடனே பகிர்ந்து கொள்ளுங்களேன்



# அந்த நாள் ஞாபகம்

தொ.பி யா அல்லது
தொ. மு வா,, ?

ஏதோ எழுத்துப்பிழையோ என்ற உங்கள்
எண்ணம் புரிகிறது. ஆனால் அதுவல்ல

சொல்ல வந்ததை இப்படி
சொல்வது தானே அய்யரின் பாணி.

தொண்ணுறுக்கு முன் பிறந்தவரா அல்லது
தொண்ணுறுக்கு பின் பிறந்தவரா என கேட்டுள்ளது

‘‘என்று நீ உளாய்
அன்று யாம் உளோம்’’ என்பது தாயுமானார் வாக்கு

வயது என்பது உடலுக்குத்தான்
வலிமையுடன் சொல்லலாம் உயிருக்கு அல்ல

கால தத்துவம் தோன்றுவதற்கு முன்
கணக்கிட்டு சொல்ல முடியுமா உடல் வயதை

அறிவுக்கும் வயது உண்டு
அது கணக்கிடுபவர்களை கொண்டு மாறுபடும்

உங்கள் வயதை அறிந்து கொள்வதாற்காக அல்ல இக்கேள்வி
உங்களிடம் உள்ள பழைய நினைவுகளை
கொஞ்சம் அலசுவதற்காக

அதிர்ஷ்டகாரார்கள் நாம் என
அப்படி 1990க்கு முன் பிறந்தவர் சொல்கிறார்கள்

அதிர்ஷ்டம் மட்டுமல்ல
அத்துடன் செல்வமும் எங்களிடம்

என 1900க்கு பின் பிறந்தவர்கள்

எப்படியாவது சொல்வதுண்டு

சரி.. இப்படி இந்த
சிந்தனையில் 1990க்கு முன் போவோம்

அம்மா கூட படுத்து உறங்கியவர்கள் நாங்கள்
அடுத்தவர் வராத தனி படுக்கையில் தாழிட்டு கொண்டு அல்ல

எந்த வித உணவுப் பொருட்களும்
எப்போதும் நமக்கு அலர்ஜியாக இருந்ததில்லை.

விரும்பியதை சாப்பிட உரிமை உண்டு
விவரமாக கிச்சன் அலமாரிகளில் சைல்டு புருஃப் லாக் இல்லை.

புத்தகங்களை சுமக்கும் பொதி மாடுகளாக இருந்ததில்லை.
இப்போ
புத்திமதிகள் சொல்லும் அளவிற்கு அறிவு இருக்கிறது

பள்ளியில் இருந்து வீட்டிற்கு வந்தது முதல் இருட்டும் வரை ஒரே விளையாட்டுதான் பலருக்கும் தெரியாமல் ரூமிற்குள் அடைந்து உலகத்தை பார்ப்பதில்லை.

விளையாடியது என்னவோ நிஜ நண்பர்களிடம் தான்
வினைகளை ஏற்படுத்தும் நெட் நண்பர்களிடம் இல்லை.

தாகம் எடுத்தால் தெரு குழாய்க்களில்
தண்ணிர் குடிப்போம் ஆனால்

தண்ணீரை காசு கொடுத்து வாங்கும்

பாட்டில் வாட்டர் தேடியதில்லை.

ஒரே ஜுஸை வாங்கி நாலு நண்பர்களும் மாறி மாறி குடித்தாலும்
ஒரு நோய்கள் கூட எங்களை வந்தடைந்ததில்லை.

அதிக அளவு இனிப்பு பண்டங்களையும்
அளவு பார்க்காமல் தட்டு நிறைய சாப்பிட்ட போதிலும் ஒபிசிடி இல்லை

காலில் ஏதும் அணியாமல் இருந்து...
நாள் முழுவதும் சுற்றி வந்தாலும்
காலுக்கு ஏதும் நேர்ந்ததில்லை.

குறைந்த வெளிச்சத்தில் படித்து வந்தாலும்; கண்ணில்
குறையாக எந்த கண்ணாடியும் அணிந்ததில்லை.

உடல் வலிமை பெறஊட்டசத்து பானங்கள்அருந்தியதில்லை.
உடலை வலுவாக்கும் சாதத்து தண்ணீரே உட்ட சத்து

எங்களுக்கு வேண்டிய வீளையாட்டு பொருட்களை நாங்களே
எங்கள் விருப்பப்படி உருவாக்கி விளையாடி மகிழ்வோம்

எங்கள் பெற்றோர்கள் பண வசதி மிக்க லட்சாதிபதிகள் அல்ல
ஆனாலும்
எங்களுக்காக அவர்கள் பணம் தேடி ஒடுபவர்கள் அல்லர்.

அவர்கள் தேடுவதும் கொடுப்பதும்
அன்பை மட்டுமே பொருட்களை அல்ல

அவர்கள் தொடர்பு கொள்ளும்
அருகாமையில்தான் நாங்கள் இருந்தோம்

எங்களை அவர்கள் தொடர்பு கொள்ள “ஏலேய்ய்”
என்ற ஒரு வார்த்தை போதும்
எப்படியும் தொடர்பு கொள்ள செல்போனை தேட அவசியமில்லை.

உணர்வுகளை போலியான
உதட்டசைப்பினால் செல்போனில் சொன்னதில்லை

உண்மைகளை எழுத்தில் கொட்டி கடிதமாக்கினோம்
உள்ளபடியே அதனால் சொன்ன சொல்லில் இருந்து
மாறியதில்லை.

எங்களிடம் செல்போன் டிவிடி, ப்ளை ஸ்டேஷன், எக்ஸ்பாக்ஸ்,
வீடியோ கேம் இல்லை

எண்ணிச் சொல்ல நிறைய நிஜமான நண்பர்கள் இருந்தனர்

வேண்டிய பொழுது நினைத்த நண்பர்கள் வீட்டில்
உணவுண்டு மகிழ்வோம்

வேண்டுவதில்லை தொலைபேசியில்
அனுமதியை அவர்கள் வீட்டுக்கு செல்ல

திறமை மிக்க தலைவர்கள்

எங்களுக்கு ரோல் மாடல் ஆக இருந்தனர்.

திறமையை தேடும் ஊழ்அல் வாதிகள் அல்லவா
இன்று தலைவர்கள்

அவர்கள் சமுகத்திற்காக தங்கள் செல்வங்களை செலவிட்டனர்
இவர்கள் சமுக செல்வங்களை கொள்ளை அடிப்பவர்களா
தெரியவில்லை

உறவுகள் அருகில் இருந்தது உள்ளமும் நன்றாக இருந்ததால்
உடல் நலம் காக்க இன்சூரன்ஸ் எடுத்தத்தில்லை

ஊரில் எடுத்த புகைபடங்கள்
கருப்பு வெள்ளையாக இருந்தாலும் அதில்

உள்ளவர்களிடம் வண்ணமயமான
நல்ல எண்ணங்கள் இருப்பதை உணரலாம்.

இப்போது எடுக்கப்படும் படங்கள் கலராக இருக்கலாம் ஆனால்
இதில் உள்ளவ்ர்களின் எண்ணங்கள் (ஏனோ) கருப்பாகவே
இருக்கின்றன.

இலவசம் பெறும் பிச்சைகாரர்களாக இருந்ததில்லை.
இன்னும் ஏதாவது கிடைக்குமா என ஏங்கியதில்லை

இந்த காலங்களில் பிறந்தவர்கள் அதிர்ஷ்டசாலிகளா
இல்லையா என்பதை இப்ப சொல்லுங்கள் ???

# வருத்தம் இல்லாமலா இருக்கிறது..

மனதுக்கு கஷ்டம்தான்! தமிழக
மக்களுக்கும் கஷ்டம் தான்

குணம் நாடி
குற்றமும் நாடி என வள்ளுவம் சொல்கிறது

என்ன தவறுகள் இருந்தாலும் ஒரு பெண்மணியை
எவ்வளவு அதிகம் தண்டிப்பது என்பது

நம் நாட்டின் வழக்கம்/பண்பாடு அல்ல!
நமக்கோ நீதிமன்றத்துக்கோ அவ்வளவு கொடுமனம் இருக்க
முடியாது(கூடாது)

இதைவிடப் பெருங்குற்றவாளிகள்
இலட்சக்கணக்கில் நாட்டில் உலவுகின்றனர்! எனவே,

மக்கள் பணத்தை மக்களிடம்
மீட்டுத் தந்துவிட்டு ஒரு சில வாரங்களில்

விடுதலை செய்வதுதான் இந்தியப் பெண்மைக்கு தரும் கவுரவம்!
தமிழகம் விரும்புவதும் இதைத்தான்

கடவுளுக்கு முன் எல்லோரும் சமம் என்ற
கருத்தை ஏற்காத கடவுள் இல்லா கட்சிகார்களும்

சட்டத்திற்கு முன்னர் எல்லோரும்
சமம் என்ற வாதங்கள் தேவையில்லை

வாருங்கள்கூட்டு பிரார்த்தனைக்கு அழைத்து
வாருங்கள் அவரை மீண்டும் அவைக்கு..

# சிறை தண்டனை சரியா..?

அடுத்து சில நாட்களில் ..

அவர்களும் தண்டிக்கப்படுவார்கள் எனவும்

உப்பை தின்னவன் தண்ணி குடிப்பான் என்ற மொழியை
உதிர்த்தபடி தப்பை செய்தவனுக்கு தண்டனை என

பதில் வந்தது ஒரு தோழமையிடமிருந்து..
படித்ததும் சும்மா இருக்க முடியுமா

உப்பை திண்ணவனுக்கு இங்கே
உப்பு தண்ணி அல்லவா தரப்பட்டுள்ளது%

தவறு செய்தவர்
தவறாமல் போகட்டும் சிறைக்கு என்றால்

தவறு செய்தவர் பட்டிலில்
தவறாமல் நம் பெயரும் இடம் பெறும் அல்லவா ?

சிக்னலில் நிற்காமல் போவது
சிக்கிக் கொண்டால் காசு கொடுத்து தப்பிப்பது என பல

இதற்காகத்தான்
இது. இந்துடன்

படித்து பார்த்து
பயந்து மயங்கிடாதீர்கள்..

இன்னமும்
இருக்கலாம் நமக்கு

இதுவரை தெரியவில்லை அப்படி இருந்தால்
இந்த வழக்கையும் இதே நீதிபதியிடம் சேர்த்துடுங்கள்

வாய்மை வெல்லட்டும் என வேண்டிக் கொள்பவர்களே இப்போது
“வாய்” அல்லவா “மெய்யை” வென்றுள்ளது

# பெண்கள் அழகாக இருக்க விரும்புகிறார்களா?

அழகாக இருக்க எந்த பெண்ணும் விரும்புவதில்லை என்ன
அப்படி சொல்லி விட்டீர்கள் என வியக்க வேண்டாம்

பெண்கள் தன்னை அழகாக இருப்பதாய் காட்டி கொள்ளவே
பிரியபடுகின்றனர் ஆனால் அழகாக இருக்க அல்ல..

இப்படி சொன்னால் எதையாவது.
இந்த அய்யர் இப்படித்தான் என சொல்லத் தோன்றும்

உண்மை இது தான் என்பதினால் தான்
உள்ளபடியே "சிந்திக்க" என "சில"வற்றை தருகிறோம்

அழகாய் இருப்பதை எல்லோரும் விரும்புவார்கள்
அது அவர்களுக்கு மகிழ்சியை தரும் ஆனால்

அழகாக இருப்பதாக "காட்டிக்கொள்ள"வே
பெண்கள் விரும்புவார்கள்
அதனால் மற்றவர்கள் மகிழ வேண்டும் என்பதற்காக

அழகு நிலையங்கள் இதைத்தானே செய்கின்றன
அங்கு தானே கூட்டம் அலைமோதுகிறது

ஆரோக்கியத்தின் வெளிப்பாடே
அழகு. அதை தான் நாம் ஆராதிக்கின்றோம்



# ஆரோக்கியம் தான் அழகு

“வெள்ளை விஷம்” (white poison) என நாங்கள்
வெளிப்படையாக இவற்றை சொல்வதுண்டு

“உப்பு”. “பால்”, மற்றும் “சர்க்கரை”
உண்மையாக சொல்லுங்கள்

எப்போதாவது பெண்கள் இந்த மூன்றை
என்றாவது தவிர்த்து இருக்கிறார்களா ?

இன்முகத்தோடு இல்லாவிடினும் (பட்டில்லை என்பதினால்)
இனிப்பு செய்யாத பண்டிகை உண்டா ?

பால் முன்பெல்லாம் எப்போதாவது கிடைக்கும்
பால் இப்போ இருபத்தி நாலு மணிநேரமும் கிடைக்கிறது..

பால் அல்ல அது
வெள்ளையாக ஏதோ ஒன்னு என நாங்கள் கிண்டலடிப்போம்

உப்பு குறைந்தாலும் வீட்டில் அடி
உதை தான் அது குறைந்தாலும் அப்படிதான்

உப்பில்லா பண்டம் குப்பையிலே என்பது மாறி
உப்பில்லா பண்டங்கள் தொப்பையிலே என

பழக்கப் படுத்திக் கொண்டால்
பார்த்து ரசிக்க மட்டுமல்ல மற்றவர்

பாராட்டி மகிழவும் அழகு வரும்
பாரே வியக்கும் ஆனந்தம் மலரும்

சர்க்கரை நோயை
சரியாக பார்த்துக் கொள்ளாதவர்கள் பட்டியலில்

பெண்கள் எண்ணிக்கையே அதிகம்
பெருமைக்குரிய விஷயமா இது ?

உப்பின் அளவு குறைக்க வேண்டும் என
உடலில் இரத்த கொதிப்பு வந்தவுடன்

இவர்கள் கேட்கமாட்டார்கள் என தெரிந்தும்
இப்படித்தான் வைத்தியர் சொல்லுவார்

பாலில் உள்ள விஷத்தன்மையினை
பாருங்கள் என விஞ்ஞானி சொன்னபின் தான்

அட அப்படியா என வியப்பார்க்கள்
அதற்குள் அவர்கள் **50000** லிட் பால் சாப்பிட்டிருப்பார்கள்

அதை தெரிந்து கொண்ட பின்னரும்
அந்த விஷத்தை விலக்க மனம் வராது..

அன்றாடம் உண்ணும் உணவின் விலையில்
அதிகமாக விலை தரும் பண்டங்கள் என

பட்டியலிட்டால் அதில்
பால் சர்க்கரை கட்டாயம் முதலிடம் பிடிக்கும்

விஷத்தை விரும்பி உண்ணும் தோழர்களே
விருப்பம் அழகு விஷயத்தில் இருக்க வேண்டாமா?

ஆரோக்கியமாக இருந்தால் அழகு தானே வரும்
அழகாய் இருந்தால் ஆனந்தம் வளரும்

அழகை ரசிக்கும்
ஆண்களே ஒன்றை புரிந்து கொள்ளுங்கள்

சிவப்பு என்பது அழகல்ல
சிரிக்காமல் சொல்கிறோம் அது நிறம்

ஆங்கிலம் என்பது அறிவல்ல
அது ஒரு மொழி அவ்வளவு தான்

ஆரோக்கியம் தரும் அழகு நிரந்தரமானது

அழகாய் இருப்பதாக காண்பித்து

ஆரோக்கியத்தை இழப்பது
ஆபத்தானது.. நிலையில்லாதது..

ஆரோக்கியம் தான் அழகு
அதுதான் தரும் ஆனந்தம்..



# இவள் விபச்சாரியா..?

பெண் விடுதலைக்காக போராடும்
பெரிய மனிதர்கள் கூட தன் பங்களா விலாசத்தை தந்ததுண்டு.

என்னிடம் கடன் சொல்லிப் போன கந்து வட்டிக்காரகளும்
ஏராளமாய் என்னிடம் உண்டு.

சாதி சாதி என சாகும் எவரும் என்னிடம்
சாதிப் பார்ப்பதில்லை.

திருந்தி வாழ நான் நினைத்தபோதும் என்னை
தீண்டியவர்கள் யாரும் திரும்ப விட்டதில்லை.

விபச்சாரிகள் கைது என்றுதானே பத்திரிகை விற்பனையாகிறது..
விலங்கிடப்பட்ட ஆண்களின் விபரம் வெளியிடாது ஏன்...?

பெண்களின் புனிதத்தை விட
ஆண்களின் புனிதம் அவ்வளவு பெரிதா ?

காய்ந்த வயிற்றுக்கு காட்டில் இரை தேடும்
குருவியைப் போல் என்னை யாரும் பரிகசிக்கவில்லை.

கட்டில் மேல் கிடக்கும் இன்னொரு
கருவியைப் போலத் தான் என்னை கையாளுகிறார்கள்.

இருட்டில் நான் பிணமாக மாறினால்தான்
பகலில் அது பணமாக மாறும்.

பின் என் குடும்பம் பசியாறும்.
நிர்வாணமே என் நிரந்தர உடையானல்தான்

சேலை எதற்கென்று நினைத்ததுண்டு. சரி
காயங்களை மறைக்கட்டுமே என உடுத்தியுள்ளேன்

வரிவரியாய் என் மேனியில் இருக்கும் தழும்புகளைப் பார்த்தால்
வரி குதிரைகள் கூட வருத்தம் தெரிவிக்கும்.

எதையும் வாங்க வசதியில்லாத
எனக்கு விற்பதற்க்காவது இந்த உடம்பு இருக்கிறதே!

நாணையமற்றவர் நகங்கள் கீறி கீறி என்
நரம்பு வெடிக்கிறதே!

எலும்புகள் உடையும் வரை, கொள்கையாளர்கள்

என்னை கொடுமைப்படுத்தியதும் உண்டு.

தூறல் சிந்தாத வான் மேகமில்லை,
கீறல் படாத வேசி தேகமில்லை.

இது இல்லாமல் பெண்கள் இல்லை. எப்போதும்
இழிவு சொல் ஆண்களுக்கு இல்லை.

முதுமை என்னை முத்தமிடுவதற்க்குள் என் மகளை
மருத்துவராய் ஆக்கிவிட வேண்டும்.

என் மீது படிந்த தூசிகளை அவளை கொண்டு
எப்படியாவது நீக்கி விட வேண்டும்.

இருப்பினும் இந்த சமூகம் இவள் மணிமேகலையை என்பதை
மறந்துவிட்டு
இவள் மாதவியின் மகள் என்பதை மட்டுமே நினைவு
வைத்திருக்கும்.

இறுதியாக இரு கோரிக்கை...
என்னை மென்று தின்ற ஆண்களே!

மனைவிடமாவது கொஞ்சம் மென்மையாக இருங்கள்.
எங்களுக்கு இருப்பது உடம்பு தான் இரும்பல்ல.

என் வீதி வரை விரட்டிவரும் ஆண்களே...!
தயவு செய்து விட்டுவிடுங்கள். நான் விபச்சாரி என்பது
என் வீட்டுக்கு தெரியாது

நாம் மாற வேண்டுமா ? இல்லை
நம்மை மாற்ற வேண்டுமா ? யோசியுங்கள்

# எண்ணம் போல வாழ்க்கை

நாம் எதை எப்படி நினைக்கின்றோமோ அதை
நம்மோடு இருப்பவர்கள் அப்படியே நினைப்பதில்லை

மரத்தை பார்க்கும் இருவர்களின் ஒருவர்
மரத்தின் இலைகளையும், மற்றவர் பழத்தையும் பார்ப்பவராக இருப்பர்

எந்த ஒரு செய்தியை சொல்லும் போதும் இப்படித்தான் வேறு எதையாவது சொல்லிக் கொண்டு இருப்பர்

தவறு அவர்களுடையது அல்ல.. நம்முடையதுமல்ல.. இந்த தர்ம பூமி இரட்டை தன்மை கொண்டது (duality)

அதனால் வருவதை அல்லது சொல்வதை
அவரவர் நிலைகளில் இருந்து எடுத்துக் கொள்ளவேண்டும்

அடுத்தவர் நிலையிலிருந்து பார்க்கும் போது ஒரு வேளை
அது சரியாகவே இருக்கும்..

அந்தி நிலையிலிருந்து பார்க்கலாமா என்பது
அவரவர் மனநிலையை பொறுத்தது

சரி .. கற்பனையாக வந்த இந்த
சம்பவத்தை படியுங்கள்

சரி என்று நீங்கள் சொன்னால்
சரியாக சொல்லலாம் நீங்கள் சொல்வது சரியல்ல என

தவறு என நீங்கள் சொல்வதானால்

தவறேதும் இல்லை என்றே ஒப்புக் கொள்ளலாம்

இனி
இந்த கற்பனைக்குள்

ஒரு இளம் தம்பதி...
ஒரு மலைப் பிரதேசம் ஒன்றிற்கு பேருந்தில் போய்க் கொண்டிருந்தார்கள்.

வளைந்து நெளிந்த பாதைகளில் சென்று கொண்டிருந்தது பேருந்து.
வழியில் அவர்கள் இருவரும் இறங்கிக் கொள்ள முடிவு செய்து,

பேருந்தை நிறுத்தி இறங்கிக் கொண்டனர்.
“பேய் நிறைந்த” என்று சொல்லுமளவிற்கு

ஆளில்லாத வனாந்திரம்,
“ஆ!!” என்று கத்தினால் அப்படியே எதிரொலிக்கும் ஒலி

மான்களும் மற்றும் அங்குள்ள
மயில்களும் குயில்களின் இசையோடு

அங்கு விளையாடிக் கொண்டிருந்தன. ஆனால் அவர்கள் மனம் அதில் லயிக்கவில்லை...

இறங்கிய இடத்திலிருந்து சற்று தள்ளி
இருந்த பாறையில் ஏறினர்.

உச்சியில் இருந்து பாதாளத்தைப் பார்த்த போது, கால்கள் கூசின.
உடல் நடுங்கியது. இருவரும்

கண்களை மூடி ஒருவரை ஒருவர் தங்கள்
கரங்களைப் “இறுக” பற்றிக் கொண்டனர்.

வனக்குரங்குகள் மரங்களிலிருந்து இவர்கள்
வருகையை நோக்கி க்ரீ....ச்சிட்டன...

அப்போது, மிகப் பெரிய சப்தம்...
அய்யோ என திரும்பிப் பார்த்தார்கள்.

இவர்கள் இறங்கிய பேருந்தின் மீது
இங்கிருந்த மலையிலிருந்து மிகப் பெரிய பாறை
விழுந்து பேருந்தை நசுக்கி இருந்தது. பேருந்தில்

விழித்திருந்த ஒருவரும் தப்பவில்லை!

இவர்கள் இருவரைத் தவிர...
இவர்களுடன் பேருந்தில் வந்தவர்கள்

பாறைக்கடியில் சமாதி ஆகி இருந்தனர்.
பறிதவித்தன மனம் சில நிமிடம்..

குயிலோசை இல்லை! மான்களும்
மயிலோசைகளும் ஒடுங்கி நின்றிருந்தன.

வனக்குரங்குகள் மலை உச்சிக்கு தாவி தனக்குள்ளிருந்து
வந்த பயத்தில் ஓடின.

இங்கு இறங்கிய
இளம் தம்பதி,

ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். மெதுவாக
இருவரும் சொல்லிக் கொண்டார்கள்.

''நாம் பேருந்தில் இருந்து இறங்கி இருக்கக் கூடாது...!''
நாமும் யோசிப்போம்

ஏன் அப்படிச் சொன்னார்கள் ?
ஏதாவது ஊகிக்க முடிகிறதா...?

சவாலான கேள்வி...!
சரியான பதில் தேடும் கேள்வி..

அவர்கள் அந்த பேருந்தில் இருந்து
அப்போது இறங்கி இருக்காமல் பயணித்திருந்தால்...
.
.
.
.
.
.
.

சில நிமிடங்களுக்கு முன்னரே பேருந்து
சட்டென அந்த இடத்தைக் கடந்திருக்கும்.

பாறை விழும் பேராபத்தில் இருந்து
பயணம் செய்த அனைவரும் தப்பி இருப்பார்கள்.

.
.
.
.
.
.
.

வேறு மாதிரியான சிந்தனை உங்களுக்குள்
வேருன்றி இருந்தால்

அப்பா.. நாம தப்பித்தோம்
ஆண்டவன் நம்மை காப்பாற்றி விட்டார்.

அது சரி.. இப்போ எப்படி இங்கிருந்து
அங்கு மீண்டு(ம்) செல்வது..?

சிந்திக்க கற்றுக் கொடுக்க முடியுமா?



# “சிந்திக்க சில”

இரட்டை தன்மை உள்ள உலகத்தில்
இயல்பாகவே நீங்களும் நானும்

பெற்றதா.. ?. இழந்ததா... ?

இழந்தவைகள் ஏராளம்
இன்னமும் சொல்லலாம் தாராளம்

குழந்தைகளாக இருந்த நாம்
குறும்பு சிறுவனான போது

மழலையை இழந்தோம்..
மறுமலர்ச்சி தான் இது என மகிழ்ந்தோம்

சிறுவன் வாலிபனான போது
சிந்திக்க கூட முடியாத எளிமையை மறந்தோம்

வாலிபத்தில் தொடங்கிய காதல்
வாழ்க்கையில் வாலிபத்தையே இழந்தோம்..

வளர்ச்சி தானே இதனை இழப்பு என
வாடுவானேன் என்பவர்கள் கொஞ்சம் யோசியுங்கள்

(நம் பிள்ளைகளை)
பெற்றுத் தரும் மனைவிக்காக
பெற்றோர்களை இழந்தோம்

மகனுக்காக பண்பாட்டை இழந்தோம்

மகளுக்காக நாகரீகத்தை இழந்தோம்

மனதுக்கு பிடிக்கபில்லையென
மணமான கணவனை (விவாகரத்து)இழந்தோம்

அண்மையில் விவாகரத்தான பெண்ணை சந்திக்கையில்

அவளிடம் கேட்டேன் உன் கணவர் எப்படி இருக்கிறார் என

கேட்ட அடுத்த வினாடி (வேறு ஒருவருடன் வந்த அவள்)
கேள்விக்கு பதிலளிப்பதாக (அவள் )

கணேசனை(பழைய கணவர்) விவாகரத்து செய்து விட்டேன்
குமாரை கல்யாணம் செய்துக்கிட்டேன் என குமாரை அறிமுகம்
செய்தாள்

‘‘கணேசன் தான் உன் கணவன் ஆனால் இப்போ
குமாரோடு வாழ்கிறேன் என சொல்’’ என்றதும்

நெருப்பு பார்வையை வீசிவிட்டு
நெளிந்தால் நம்மை விட்டு விலகுவதற்காக..

மாற்றங்கள் இப்படித்தான்
ஏமாற்றங்களாக இருக்கின்றன

தனக்கு வந்தால் சோதனை .
தவறாமல் மற்றவர்க்கு வந்தால் தண்டனை

என வாழ்ந்து கொண்டு வரும் நம் வாழ்வில்
எத்தனை இழப்புகள் எத்தனை இழப்புகள்..

நம் வாழ்வில் மட்டுமல்ல
நாம் இழந்தது

வீடுகளுக்காக
விளை நிலங்களை இழந்தோம்

பசுத் தோல் பைகளுக்காக
பசுவையே இழந்தோம்

நகர்புற மேம்பாலங்களுக்காக
நாம் சாலையோர மரங்களை இழந்தோம்

மெட்ரோ ரயில் பணிகளுக்காக நம்
மெமரியில் உள்ள பல கட்டிடங்களை இழந்தோம்

(சென்னை) வடபழனியில் உள்ள
வந்தாரை வாழவைக்கும் முருகன் கோவில்

திருவிழா கூட மெட்ரோ ரயில் பணியினால்
திருவீதி உலா வழக்கம் போல் வரவில்லை

இப்படித்தான் நாம்
இழந்தது

கண்களை விற்று விட்டு
கண்கவர் சித்திரங்களை வாங்கி குவிக்கிறோம்

பணம் இல்லாத போது இருந்த பல
பணம் இருக்கும் போது மாறிவிடுகிறது

ஓட்டல்ல வேலைசெய்தாலும் வீட்ல வந்து சாப்பிடறவன் பணம் வந்ததும்
வீட்ல சமைச்சாலும் ஓட்டல்ல போய் சாப்பிடறான்

வயத்தை நிரப்ப சைக்கிள்ள ஓட்டிக்கிட்டு போனவன் பணம் வந்ததும்
வயத்தை குறைக்க சைக்கிள்ள ஒரே இடத்தில வைச்சுட்டு ஓட்டறான்

சோத்துக்காக அலைந்தவன் பணம் வந்ததும்
சொத்துக்காக அலைகிறான்

பணக்காரனாக நடந்து கொண்டவன் பணம் வந்ததும்
பணமில்லாத ஏழையாக காட்டிக் கொள்கிறான்

நிம்மதியாக இருக்கும் போது பணத்தை தேடுகிறான் பணம் வந்ததும்
நிம்மதியை தேடுகிறான்

இன்றைய இளைஞர்கள் நிம்மதியாக
இருக்கும் போது மனைவியை (பெண்) தேடுகிறார்கள்

மனைவி வந்தவுடன் நிம்மதியை தேடுகிறார்கள்
மனம் விட்டு சொல்ல முடியவில்லை அவ்வளவு தான்

இப்படி இழந்தது எத்தனை எத்தனை
இருப்பதை வைத்து சந்தோஷபடுங்கள்

என்பவருக்காக இந்த சிந்தனையை சொல்லி
எண்ணங்களை பகிர்ந்து கொள்கிறோம்



# இப்படியும் சிலர்..

பல மாதங்களாக ஒரு மனிதர் கோமாவிற்கு செல்வதும்
பதிலுக்கு அதிலிருந்து மீண்டு வருவதுமாக இருந்தார்.

அவருடைய மனைவி இரவும் பகலும்
அவர் அருகில் இருந்து அவரை கவனித்துக் கொண்டார்.

கவனம் திரும்பிய ஒரு கணத்தில், அவள்
கணவன் அவளை அருகில் வருமாறு சைகை செய்தான் .

அருகில் அமர்ந்த
அவளிடம், மெதுவாக பேசினான்

''என்னோட கஷ்ட காலத்தை பத்தி நான் யோசிச்சிட்டு இருந்தேன்
என்னை வேலையிலேர்ந்து சஸ்பெண்ட் பண்ணப்பவும்

நீ என்னோட இருந்தே,
என்னோட வியாபாரம் மூழ்கிப் போனப்பவும்
இரவும் பகலும் வேலை செஞ்சிட்டு என் கூட இருந்தே,

என்னை யாரோ சுட்டப்போ அப்பவும் நீ
என்னோடவே தான் இருந்தே,

இப்போ நான் உடம்பு சரியில்லாம சரிஞ்சு கிடக்கிறேன்
இப்பவும் நீ என்னோட தான் இருக்கிற.

(கண்களில் நீருடன் படுக்கையில் அவன்
கணவனின் புகழ்ச்சியில் மெல்ல மனதுக்குள் சிரித்தவளாய்
அவள்)

இதை எல்லாத்தையும் நான் நினைச்சு பார்க்கும் போது
இப்போ தான் தெரியுது என்னோட "துரதிர்ஷ்டமே நீ தான்னு "
என்றான்.

# தமிழில் வேண்டும் திருக்குறள்...

எதையாவது மேற்கோள் காட்ட நாம்
எப்போதும் கையில் எடுக்கும் ஆயுதம் திருக்குறள்

திருக்குறளை மதிக்காதவர் இல்லை
திருக்குறளை போற்றாதவர் இல்லை

பல மொழியில் மொழி பெயர்ப்புகள்
பலரில் சிலர் கூட அதன் வழி நடப்பதில்லை

அண்மையில் குஜராத்தியில் மொழி மாற்றம்
ஆதரவு கரம் நீட்டி பலர் வாழ்த்து சொன்னார்கள்

மன்னிக்க இந்த கருத்தில் நான்
மாறுபடுகின்றனே கொஞ்சம் செவி கொடுங்கள்

அவர்கள் மொழியில் மாற்றம் செய்வது தவறல்ல
ஆனால் தமிழை போற்றாமல் இங்கிருந்து

பொக்கிஷத்தை மட்டும் எடுத்துசெல்வது
பொறுக்க முடியவில்லை

அதை நாமே வாழ்த்தி வழி
அனுப்புவது ஆரோக்கியமானது இல்லை

திருக்குறளை அவர்கள் போற்றுவதாக இருந்தால்
தமிழை அல்லவா போற்ற வேண்டும் கற்க வேண்டும்

திருக்குறளை அவர்கள் தமிழில் அல்லவா
தினமும் அவர்கள் மொழியில் கற்று தர வேண்டும்



# முதுமையே வா..

இளமையாய் இருக்க யாருக்கு தான்
இங்கு ஆசையில்லை

அறுபது வயது கடந்த பின்னரும்
அவரவர்கள் தன்னை அழகு படுத்துவது இயல்பே

கறுப்பு முடியை வரவழைக்க வெள்ளையை
கறுப்பாக்கும் முயற்சியில் சிலர் முதல் நாளே தயார்

கறுப்பு முடியை கொண்டுவர இயற்கை மருத்துவம்
கண்டு சொல்லவில்லை அவர்கள் சொல்வது

வெள்ளை முடி தான் இயற்கை
கறுப்பு என்பது சிலகாலம் இருக்க கூடியது என்கின்றனர்

சில காலம் கறுப்பாக உள்ளதை
பல காலம் தக்க வைக்க சில உணவு முறை உண்டு

உண்டு பார்த்து பலன் பெற்றவர்கள் சிலர் எனினும்
உண்மையில் பலனுண்டு என்றறிந்தும்

பழக்கத்தில் கொண்டு வராதவர்கள் நம்மில்
பலர் என்பதை உறுதியாக சொல்லலாம்

சரி

இப்போ சொல்லுங்கள்
இனியாவது பழக்கத்திற்கு கொண்டு வருகிறோம்

என்று சொல்பவர்களுக்காக
எழுத்தில் தருகிறோம் பழக்கத்தில் கொண்டுவர

எல்லாம் நம்மால் செயல்படுத்தி
ஏற்கக் கூடியது கொஞ்சம் முயற்சி எடுக்கனும்

சாப்பிடுப்பிடும் சோற்றினை எவர்சில்வரில்
சாப்பிடுவதை தவிர்த்து

வெள்ளி தட்டில் சாப்பிடவேண்டும்
வெள்ளி விற்கிற விலைக்கு என

வெளிச்சம் போட்டு காட்டாதீர்கள்
விலைவாசி உயர்வினை..

பத்து அல்லது 15 ஆயிரத்தில் தட்(டினால்)டு கிடைக்கும்
பத்திரப்படுத்தி (கல்யாணத்திற்கு தந்ததை) வைத்திருப்பவருக்கு

இந்த ஆலோசனை தேவையில்லை
இருப்பினும் சாப்பிடும் அனைத்தும் வெள்ளியில்

டம்ளர்(லோட்டா) ஸ்பூன் கப்பு என
அனைத்தும் வெள்ளியில் இருக்கட்டும்

சப்பாட்டில் தினந்தோறும் நெல்லியை இருவேளை
சாப்பிட வேண்டும் ரிசிப்பி வேணுமானால் பின்னர் (தருகிறோம்)

தண்ணீர் குடிக்கின்றோமே அது மினரல்
தண்ணீராக இருந்தாலும் அதில் கருவேப்பில்லை இருக்க
வேண்டும்

குடிக்கும் தண்ணீர்
கருவேப்பில்லை கஷாயமாக இருக்க வேண்டும்

இவற்றிக்கெல்லாம் ஒன்றும் செலவு

இல்லை கூடுதலாக செய்வதற்கு

கொஞ்சம் கடுமையாக முடியுமானால்
காலையில் தெளிந்த இஞ்சி சாறு தேனுடன்

பகலில் சுக்கு கஷாயம் வடிகட்டி
இரவில் கடுக்காய் தேன் கலந்து என

சித்தர் வழி சொல்லலாம்
சிறக்க சொன்ன இவையெல்லாம்

மறந்து, நாம் கடைகளில்
மருந்து கலந்த ஹோர்டையை தேடுகிறோம்

இதுவெல்லாம் முடியாது சாரு
இதைவிட சுலபமா எதாவது இருக்கா என கேட்டால் உண்டு அது

தண்ணீர் தான் அதனை இப்படி சாப்பிட பழகுங்கள்
தண்ணீர் வைக்கும் பானை செப்பில்(உடியீயீநச) இருக்க வேண்டும்

அந்த பானையில் வில்வ இலை ஒரு இனுக்கு
வேப்பிலை ஒரு இனுக்கு, கருவேப்பில்லை ஒரு இனுக்கு

ஒரு தங்க காசு (வசதிக்கேற்ப 1 மிலியில் கூட இப்போது கிடைக்கிறது)
ஒரு வெள்ளி காசு (வசதிக்கேற்ப) நம்பிக்கை இருப்பவர்கள் ருத்திராட்ஷம்

நம்பிக்கை இல்லாதவர்கள் நெல்லியை ஊசியால் குத்தி அல்லது கத்தியில் லேசாக பிளந்து அப்படியே தண்ணீர் உள்ள செப்பு பானையில் போடவும்

தண்ணீர் குடிக்கும் போதெல்லாம்
இந்த தண்ணீரையே குடிக்கவும்

உட்கார்ந்த படி உள்ளங்கையில் வெள்ளிச் செம்பினை வைத்து
அந்த வெள்ளிச் செம்பில் இந்த நீரை நிரப்பி குடியுங்கள் (குறைந்த பட்சம் 5 லிட் ஒரு நாளைக்கு)

முதுமை உங்களை விட்டு கொஞ்சம் விலகி செல்வதை
மற்றவர்கள் சொல்வார்கள்..

இத்துடன் வேறு சில உத்திகளும் உண்டு
அவைகளை இன்னொரு சமயத்தில் சிந்திப்போம்

# கடன் வாங்கலாமா

கடன் என்றதுமே என்
“கடன் பணிசெய்து கிடப்பதே” என்ற

அப்பர் வாக்கினை அனைவரும்
அசைபோடுவர் இங்கு

கடன் என்பது கடனையல்ல
கடமையை குறிப்பது

இங்கே சொல்ல வருவது கடமையை அல்ல
இப்போ தேவையாய் உள்ள “கடன்”

கடன் வாங்கலாமா? வேண்டாமா?
கடனா வேண்டாம் என ஓடுபவரும் உண்டு

எவ்வளவு கொடுத்தாலும் இது போதாது
எத்தனை கொடுத்தாலும் இன்னும் வேணுமென

இருவேறு பட்டவர்
இவ்வுலகில் உண்டு

இந்த உடல்
இயற்கையிடமிருந்து நாம் பெற்ற கடன் தானே

வட்டியை கொடுப்பது போல
வாழ்நாளில் நற்செயல் செய்தால் கடன் அடையும்

வட்டியையும் தராமால் ஏமாற்றுபவர் போல
வாழ்நாளில் தீச்செயல் புரிந்தால் மீண்டும் பிறவி வரும்

மரத்தை கொடுத்து கடனாக
மழையை வாங்குகிறோம்

இப்போ எங்கே கொடுக்கின்றோம் என்கிறீரா
இதுவும் சரி. . என்ன செய்ய

நம் பெற்றோர்களிடமிருந்து வாங்கிய கடனை
நம் பிள்ளைகளிடம் திருப்பி தருகிறோம். இப்படி

கடன் வாங்குவது
கவுரவத்திற்கு மட்டுமல்ல

நம்மை கவுரபடுத்திக்கொள்ள என
நாம் சொன்னால் வித்தியாசமாக பார்க்கவேண்டாம்

கடன் அட்டை ஒரு பிசாசு கொடுத்த
காசுக்கு மேலே வட்டி போட்டு வாங்கும் பேய் என

திட்டுபவராக இருந்தால் தொடர்ந்து படியுங்கள்
திண்ணமாக சொல்லுவீர்கள் இத்தனை பயனா என

பில் தேதி **20** என வைத்துக் கொண்டால்
பிரித்து வைத்துக் கொள்ளுங்கள் உங்கள்

செலவு **21** முதல் **25**க்குள் கடன் அட்டை மூலம் என
செயல் படுத்திக்கொண்டால் இந்த செலவு தொகையை

அறுபது நாட்களுக்குப் பின் வட்டியில்லாமல்
அந்த தொகையை திருப்பி செலுத்தச் சொல்லுது கடனட்டை

இலட்சக்கணக்கில் வரையறை(டைஅவை) தந்திருப்பதால்
இது அத்தனையும் செலவு செய்ய கட்டாயமில்லை

மூட்டை அரிசி வாங்கி வைத்தால்
முழுவதையுமா நாம் சாப்பிடுகிறோம் அது போல

இலட்சங்கள் வரை தரும் கடன் அட்டைகள்
இலவசமாக கிடைக்கும் போது மறுக்கலாமா ?

கடன் அட்டைகளை பயன்படுத்துங்கள் ஒன்றல்ல
கட்டாயம் இரண்டு அல்லது அதற்கு மேல்

ஏன் இரண்டு அல்லது அதற்கு மேல் தெரியுமா

ஏனெனில் ஒவ்வொரு அட்டைக்கான தேதியும்

வெவ்வேறு நாளில் வருவதால் செலவுகளை
வெவ்வேறு நாட்களுக்கு ஏற்ப அந்தெந்த அட்டைகளை

பயன்படுத்தினால் அத்தனை அட்டைகள் மூலமும்
பயன்கள் முழுமையாக கிடைக்கும்

எத்தனை திருப்பித் தர முடியுமா
அத்தனை செலவு செய்யுங்கள்

அதுவும் கடன் அட்டை மூலமாக
அப்போது தான் முழு பயனை அடைய முடியும்

“ஆகாறு அளவிட்டிதாயினும் கேடில்லை
போகாறு அகலாக்கடை” என்ற

இந்த குறளில் சிக்கனமாக இருக்க சொல்லவில்லை.
சொல்வதெல்லாம்
இந்த கடனட்டையை கவனமாக பயன் படுத்துவது பற்றி தான்

உங்களிடம் கடனட்டை இல்லையெனற்றால்
உடனே வாங்கிக் கொள்ளுங்கள்

ஒரு கடனட்டை தான் இருக்கிறதென்றால்
இன்னொரு கடட்டையை வாங்கிக் கொள்ளுங்கள்

என்ன அப்படி பார்கின்றீர்கள்
எல்லாம் இலவசமாக கிடைக்கிறது

அதனை கவனமாக பயன்படுத்தவேண்டும்
அப்போது தான் அதன் பயன் முழுமையாக கிடைக்கும்

கடன் அட்டை என்பது
கத்தியில் கையில் வைத்திருப்பது போல்
எந்த பக்கம் பிடித்துக் கொண்டிருக்கின்றீர்கள்
என்பதை பொறுத்தே அந்த கத்தியின் பயன்பாடு

கடன் அட்டைக்கு பணம் செலுத்துவதே முதல்
கடமையாக கொண்டால் எப்போதும் மகிழ்ச்சியே

“இந்தியா” நாட்டில் ஏன் இப்படி
“இத்தாலி”ய சிந்தனை என யோசிக்காமல்

சிந்திக்க சில என்ற பகுதியில்
சிறப்பானதொரு கடனட்டை பயன் பாடு பற்றி யோசியுங்களேன்



# இளைஞர் கெட்டு தான் போகிறார்களா?

இளைஞர் கெட்டுபோக காரணம்
இப்படி மீடியா கெட்டு போச்சு என

காரணம் சொல்பவர்கள்
கட்டாயம் சினிமாவை சொல்லாமலிருப்பதில்லை

விரசமான பாடல் என்பவர்கள்
விவரமாக திரும்பி பாருங்கள்

அன்றைய பாடல்களிலும்
அந்த விரசம் இருந்த்தது

வெளிப்படையாக இல்லை எனினும்
வெள்ளித்திரையில் இது இல்லாமலில்லை

இன்று அப்படி ஏன் கவிஞர்கள் எழுதுவதில்லை
இது பற்றி சிந்தித்த்துண்டா ?

அப்படி எழுதும் கவிஞர்கள் இருக்கிறார்கள்
அவர்களுக்கு சினிமாவில் வாய்ப்பு கிடைப்பதில்லை

வாய்ப்பு கிடைத்தவர்களுக்கு எழுத்தெரியவில்லை
வார்த்தைகளுக்கே பஞ்சம் ல..லா..ல்ல போடுகிறார்கள்

கிரியடேவிட்டிக்கு பஞ்சமில்லை%

கிரியேடிவிவ் மக்களுக்கு வாய்ப்பு இல்லை

மாற்றங்கள் தான்
மாறுதல்களை கொண்டுவரும்

# இங்கே ஒரு கெஜ்ரிவால்

திருடர்கள் கேட்டார்கள்
திரும்பவும் அரசியலுக்கு வந்து குறை சொல் என

ஜெயித்து விட்டு பேசு என
ஜாலியாக இருக்கும் அவர்கள் சொன்னார்கள்

ஜெயித்து வந்த பின்னரும் மெஜாரிட்டி கேட்டு
ஜன் லோக் பால்லுக்கு கை கொடுக்க வில்லை

ராஜினாமா செய்து விட்டு மீண்டும்
ராஜ்ஜியத்தை பிடிப்பேன் என்ற போது

வேறு வழியாக சிரித்தார்கள்
வேலையில்லாதவர்கள்

நாற்பத்தொன்பது நாளில்
நம்பிக்கை இழந்த்தாக கூச்சலிட்டனர்

நிலை இப்போது நிறமாறியது..
கெஜ்ரிவால் என்ற இளைஞன் இன்று
கெத்தாக நிற்கும் போது

கலைத்துறை மட்டும் என்ன
கண் பட்டுவிடுமா

பழைய படத்தின் பெயர் வைக்கும்
பழக்கத்தை மாற்றுவோம்

கதை புதிது சொல் புதிது
கருத்து புதிது என

மாற்றங்களை கொண்டு வருவோம்
மறுபடியும் கலைத்துறைக்கு புத்துயிர் தருவோம்

# புரியாத புதிரா

சர்கார் நடத்த வேண்டியவர்கள்
சர்கஸ் நடத்தினால்

கை தட்டி வரவேற்றவர்கள் இப்போ
கை கொட்டி தானே சிரிப்பார்கள்..

பொது நிர்வாகம் என்பது
பொது மக்களிடம் எல்லாவற்றையும் பேசுவதில்லை

சொல்லுக, சொல்லில் பயன் உடைய, சொல்லற்க,
சொல்லில் பயன் இலாச் சொல்.

என்ற வள்ளுவர் தந்த இந்த குறளில்
எத்தனை "சொல்" பாருங்கள்

அய்ந்து முறை சொல் வரும்
அவை "என்ன" "எப்படி" "எப்போது" "எங்கே" "எதற்கு"

என அறிந்து பேச வேண்டும்
என்பதை சொல்லியே வந்தது

ஒரு குழந்தையால் அம்மாவோட பெரிய கைபையை (பேக்கை)
ஒரு போதும் எடுத்து நடக்க முடியாது ஆனாலும்

நான் தான் எடுத்து வருவேன் என அழுதால்
நமக்கென்ன என சில நிமிடம் அம்மா கொடுப்பார்கள்..

இந்த குழந்தையால் இது முடியாது என தெரிந்தும்
இதுவும் எடுத்துப் பார்த்து அம்மா முடியலேன்னு சொல்லும்

சில குழந்தைகள் உடனே சொல்லி அழும்
சில குழந்தைகள் 50 நாட்களில் சொல்லும்

இங்கு வீணானது மக்கள் பணம் மட்டுமல்ல

இவர் நடவடிக்கை விமர்சனம் செய்யும் நேரமும் தான்
மக்கள் பணத்தை வீணாக்கியமைக்கு
மக்களே இவர் வழக்கு பதிவு செய்யலாம்

ஊழ் அல்லாத வழி வராத வருமானத்தை விட
ஊர் மக்கள் பணம் இப்படி வீணாவது அதிகம் தானே
ஊட்ட சத்து மாத்திரை
உடலுக்கு நல்லது தான் ஆனால்

ஊட்ட சத்து மாத்திரையே
உணவாக முடியுமா.. ?

ஊழலை ஒழிக்க என அவருக்கு ஒரு கூட்டமெனில்
ஊழலை வளர்க்க என இவருக்கு அதைவிட பெருங்கூட்டம்

மண் குதிரை நம்பி ஆற்றில் இறங்குதல் என
மக்கள் மத்தியில் ஒரு சொல்லடை உண்டு

இந்த குதிரையை நம்பி இறங்கியவர்களை
இப்போ என்னவென்பது.. எங்கே போவது..

விஷம் கூட மருந்தாகும் அதற்காக
விஷமே கூடாது என்றால் எப்படி ?

வலது கால் நடக்கும் போது
இடது கால் ஓய்வெடுக்கும்

சூரிய உதயம் என்றால்
சூரிய அஸ்தமனம் உண்டு

சிறிய சர்க்கரை கட்டியை எறும்பு எடுத்துச்செல்வதும்
சந்தன கட்டையை யானை எடுத்துச்செல்வதும் முரண் அல்ல

பறவை கொஞ்சமான உணவிற்காக எத்தனை கிமீ பறக்கிறது
பாசத்தை பணத்தின் மீது வைத்தவர் எப்படி சம்பாதிக்கிறார்

இவைகளை முரண் என பார்ப்பது எப்படி சரியாகும்
இவர் பல்முளைக்காத குழந்தையாய் இருந்து

பல்(லை உடைக்கும்) முளைத்த வாலிபராவதும்
பல் இழந்து வயோதிகராவதும் முரண் அல்ல..

வாழ்க்கையை சரியாக பார்க்கத் தெரியாதவர்கள் இவர்கள்
வழிமாறி போன நம் சகோததரர்கள்..

அதைவிட முக்கியம்
அவர் சொல்லும் முரண் நமக்கு

ஆர்வம் ஊட்டுகின்றது என தலை
ஆ(ட்)டும் பொம்மைகளும் உண்டு

வள்ளுவரிமே முரண் இருக்குது என
வாதாடுவார்கள்.. இவர்கள் மாறுவார்கள்

அதையும் அவர்கள் முரண் என்று சொல்வார்கள்
அவர்களுக்கு ஒரு செய்தி

படித்தால் அறிவு வராது.. வரவே வராது..

படித்தால் அறியாமை விலகும்..

அவர்கள் அறியாமை விலகி
அனுபவம் பெறும் போது மகிழ்வோம்..

அது புரியும்
அதுவரை காத்திருப்போம்



# எதை கொடுக்க வேண்டும்.?

“கொடு” என்பதை விட இன்றைய நாளில்
“எடு” என்ற பழக்கமே அதிகம்

கொடுக்க மனமில்லாதவர்
கொடுமைகாரர்கள் என்றே சொல்லலாம்

தங்கமும் வெள்ளியும் இருந்தும் கூட
தனியாக இருக்கிறோம் என பயந்து கொண்டு

பயன் படுத்தாமல் அதனை பத்திரபடுத்தி
பாங்கு லாக்கரில் வைத்து விட்டு

வேலைக்காரர்களுக்கு பயந்து வாழும் கோழைகள்
வேளைக்கு உணவு வந்தால் போதும் என

வேலைக்காரர்களின் நலனில் அக்கரை கொள்ளாது
வேளையை ஓட்டிக் கொண்டிருக்கும் கோமாளிகள்

அடுத்தவருக்காக இரங்குவது போல சிலர் இருப்பர் ஆனால்
அவர் வீட்டு பணியாட்களை கடிந்து கொள்வார்

கொடுக்கிற காசுக்கு வேலை செய்யறதுல்லேன்னு வேற
காண்பவர்களிடமெல்லாம் வேறு புலம்புவர்

தங்கத்தையும் வெள்ளியையும்
பாங்கு லாக்கரில் வைத்து விட்டு

சேமிப்பு புத்தகத்தையும் தினம் தினம்
வைப்பு நிதி ரசீதையும் பார்த்து மகிழ்வர்

அனுபவிக்க மாட்டாத மனித ஜீவிகள் சொன்னாலும்
அறிந்து கொள்ள விரும்பாத அப்பாவிகள்
அவரவர் எண்ணப் படிதான் வாழ்க்கை என்பதற்காக
அவரவர் எண்ணமறிய ஒரு சின்ன கதையை இங்கே தருகிறோம்

சிறுவன் ஒருவன் தெருவில் நடந்து சென்று கொண்டிருக்கையில் விலை உயர்ந்த கார் ஒன்று நின்றுகொண்டிருப்பதை பார்த்தான்(audi car அல்லது bhart benz என வைத்துக் கொள்ளுங்கள்),
ஆச்சர்யத்துடன் விழிகள் விரிய அதன் அருகில் சென்றான்.

இதை கவனித்த காரின் உள்ளே இருப்பவர் அச்சிறுவனை அழைத்து “என்ன காருல ஒரு ரவுண்டு அடிக்கலாமா” என்று கூறி அச்சிறுவனை காரில் சிறிது தூரம் அழைத்து சென்றார்.

சிறுவன் அவரை பார்த்து ”கார் சூப்பரா இருக்கு அங்கிள், ரொம்ப விலையா இருக்குமே” என்று கேட்டான்.

அதற்கு அவர் ”எனக்கு தெரியாது தம்பி, ஏன்னா இந்த காரை எனக்கு என் அண்ணன் வாங்கி கொடுத்தார்” என்றார், இதை கேட்டதும் சிறுவன் விழிகள் ஆச்சரியத்தில் விரிந்தன .....

இதை கவனித்த அவர் ”நமக்கும் இது போல ஒரு அண்ணன் இருந்தா நல்லாஇருக்குமேன்னு” நினைக்கிறியா, என்று சிறுவனைப் பார்த்து கேட்டார்.

”அதில்லை, நான் அந்த அண்ணன் போல் இருக்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன்” என்று சிறுவன்

பதிலளித்தான்.

அவரவர் எண்ணங்களைப் போலவே
அவரவர் வாழ்க்கை அமையும்”



# இது நுங்கு....

கொளுத்தும் வெயிலில்
கொடுக்கலாமா மூளைக்கு வேலை

அதற்கு தான் சுவைத்து மகிழ
அன்பு சுவையுடன் இந்த நுங்கு

பனை ஓலையில் கட்டி இப்போ
பிளாஸ்டிக்கில் பையில் போட்டு

இங்க நுங்கு காயை அப்படி இப்படி சீவி
இயற்கை வாசத்துடன்

சுவைத்ததுண்டா தோழமையே..
சுவைக்கத்தந்தோம். முயற்சி செய்யுங்கள்

இந்த நுங்கை முகத்தில் தடவின்கொண்டால்
இவர்கள் விரும்பும் சிவப்பு அழகு தானே வரும்

பிளாஸ்டிக் முறுக்கை விற்றபடி
பையில் போட்டு தருகிறார்கள்

ஆபத்து தெரியாமல்
அதையும் வாங்கி சாப்பிடுபவரை நினைத்து

உண்டு மகிழுங்கள்

உங்கள் நண்பருக்கும் தாருங்கள்



# சைவமா? அசைவமா?

சைவமா ? அசைவமா ? என
சாப்பாட்டில் கேட்பதுண்டு

அசைந்து செல்வதை சாப்பிட்டால் அது அசைவம்
அசையாமல் இருப்பதை சாப்பிட்டால் அது சைவம் என

விளையாட்டாகவும் கொஞ்சம்
வினையமாகவும் சொல்வதுண்டு

எதை வேண்டுமானாலும் சாப்பிடுங்கப்பா
எங்க முருகனோட கோழி ஆடுகளை சாப்பிடாதீங்கன்னு

வாரியார் சுவாமிகள் அவ்வப்போது அன்புரைகளை
வாரி வழங்குதுண்டு

கூர்மையான பல் இல்லாதவைகளை சாப்பிடலாம் என
கூறுகிறது இஸ்லாம்.

சாப்பிட்டுத்தான் ஆக வேண்டும் என்ற கட்டாயமில்லை என
சகல மதங்களும் கூறுகிறது..

கொன்றால் பாவம்
தின்றால் போச்சு எனும் புத்த பௌத்தமும்

கொன்றவனின் பாவம்
தின்றவனை போய் சேரும் என்றே சொல்கிறது

தனி அதிகாரத்தையே
தமிழ் கூறும் வள்ளுவம் சொல்கிறது

அசைவம் வேண்டாமென
அதனை தவிர்க்கவே சிலர்

உபவாசம் எனும்
ஒரு பொழுது உண்ணும் நாட்களிலும்

அசைவத்தை விலக்கி வைப்பார்கள்
அவர்கள் புரட்டாசி சனி, ஆடி வெள்ளி என

சரி
ஏன் அசைவம் வேண்டாம் என
எப்போதாவது சிந்தித்துண்டா..

சுவைக்காக சாப்பிடுபவர்கள் இந்த சிந்தனையை
சுவைப்பார்களா ? தாய் போன்ற ஆசிய நாடுகளில்

பல்லி, பாம்பு, தேள், நத்தை என
பலவற்றையும் பொறித்து சாப்பிகிறார்கள்

இந்தியாவில் கூட சிலர்
இன்றும் ஆட்டின் கண்களை பொறித்தும்

கென்யா போன்ற ஆப்பிரிக்க நாடுகளில்
கெடுதல் செய்யும் மாட்டின் மடியை விரும்பி

சாப்பிடுகிறார்கள்.. தினமும் (உபவாச நாளொல்லாமில்லை)
சாப்பாட்டில் மாடு இல்லாமல் மெனு இருக்காது

எது உள்ளே போகிறதோ
அது ஒரு விளைவை ஏற்படுத்துகிறது

உயிர் உள்ள உணவுகளை சாப்பிட்டால்
உயிராற்றல் பெருகும் சரிதானே

காய்கறிள் பழங்கள் முதலியன உதாரணமாக
கண்களை மூடிக்கொண்டு இதற்கு சொல்லலாம்

உயிர் ஊட்டப் பெற்ற உணவுகள்
உண்மையிலேயே ஆரோக்கியமானது
முளைகட்டிய பயிறு வகைகள் இதில்
முன்வரிசையில் நிற்பதை சொல்லாமலே அறியலாம்

உயிர் நீக்கப்பட்ட உணவுகள்
உரக்கத்தான் சொல்லி ஆக வேண்டும் இது

மாமிச உணவுகள் என சொல்லும்
பறப்பன நடப்பன ஊர்வன இவை

சற்றும் நன்மை தருவதில்லை
சரிதான் போங்க என்பவருக்காக கூடுதலாக..

எந்த ஒரு உயிருமே தன்னை காப்பாற்றிக் கொள்ள
எப்போதும் முயற்சி செய்யும் தானே

எறும்பு புற்றில் கைவைத்தால்

எப்படியும் கடித்து விடுகிறேதே ஏன்

நம்மை அழிக்க வருகின்றனரோ என்றே

நம் எறும்பாருக்கு பயம்

அப்போது தீய சக்திகளை

அவை வெளியிடுகின்றது சரிதானே

அந்த தீய சக்திகளை உண்டு

அந்த உடலை வளர்க்க விரும்பும் கோழைகளை

இறந்த பின் சாப்பிடுவதால்

இவர்களை பிணம் திண்பவர்கள் (என சொல்லலாமா ?)

ஆக விரும்பி உண்ணும்

விஷங்களை உண்டுதான் ஆகவேண்டுமா



# தண்டனைகள் சரியாதண்டனைகளும் மன்னிப்புகளும்

தவறாக பயன் படுத்தப்படுவது நாம் அறிந்ததே

குற்றவாளி தண்டிக்க கூடாது என

குறைந்த பட்ச தண்டனை யானாலும் யோசித்து

தரவேண்டும் என்பது

தர்ம சாஸ்திரம்.. சரி..

தண்டத்தொகையாக கட்டும்

தொகை அரசு கருவூலத்தில் இருக்கும்

இது மக்களுக்கும் பயன்படாது

இதற்கு உரியவருக்கும் பயன்படாது..

யாருக்குமே பயன் தராதநிலையில் நீதிபதி என

யாரோ ஒருவர் தரும் தண்டனை தொகையால்

யாருக்கு லாபம்.. ?

யார் இதை கேட்பார்கள்..!!

மன்னிப்பை விட

மகத்தான தண்டனை எது உள்ளது ?

சின்ன கவுண்டர் படத்தின் வரும்

சீன் நினைவில் உள்ளதா ?

அவருக்கு தந்த தண்டனை

அந்த மன்னிப்பு தானே

சட்டங்களும் நீதிகளும்

சாதரண மனிதர்களால் இயற்றப்பட்டது தானே

தொடர்ந்து கூட்டு பிரார்த்தனையை உங்கள் இல்லத்திலே தொடருங்கள்

வெற்றிகள் நம் பக்கம் என்றாலும்
வெல்வது நல்லவர் லட்சியங்களே..



# தியாக திருவுருவம் ஆண்களே..!!

உண்மைகள் கேவலமானதா?
உள்ளபடியே சொல்லுங்கள்!!?

தியாகம் செய்பவர்கள் ஆண்களா?
தி(சி)க்கி தவிக்கும் பெண்களா?

பட்டி மண்டப தலைப்பு போலிருந்தாலும்
பக்குவமாக சிந்திக்க வேண்டியதிது என்பதால்

சிந்திக்க எடுத்துக் கொள்வோம் இந்த
சிந்தனையை (be with open mind please)

பெண்கள் தான் தியாகம் செய்கின்றனர் என்ற
பிரம்மையிலேயே நாம் பழகிவிட்டோம்

உண்மையிலேயே தியாகம் செய்பவர்கள் “பெண்களை விட”
ஆண்களே என்றால் பெண்களை இகழ்வதாக

எண்ணக்கூடாது.. உண்மையை அறிய
எல்லோருக்கும் சொல்லவே இந்த சிந்தனை

பெண்களை பற்றி அவர் தம் தியாகம் பற்றி நிறைய
படித்திருப்பீர்கள்...
ஆண்களைப் பற்றியும் இப்போது கொஞ்சம் தெரிந்து
கொள்வோம்....

ஆண் இயற்கையின் மிக அழகான படைப்புகளில் ஒன்றாவான்.
அவன் விட்டுக்கொடுத்தலை மிகச் சிறிய வயதிலேயே தொடங்கி
விடுகிறான்,

தன் தாய் தந்தை, சகோதரிக்காக குடும்ப சூழ்நிலையால்,.....
பின் தன் காதலை தன் குடும்ப நிலையை எண்ணி தியாகம்
செய்கிறான்.

பள்ளி பருவத்தில் நண்பர்களுக்காக

பள்ளி வகுப்புகளை தியாகம் செய்கிறான்

வெளி உலகில் இவர்கள் (தன் மனைவி மற்றும் குழந்தைகள்) வாழ
வெளிநாடுகளில் வேலை செய்வதன் மூலம்

அன்பு மற்றும் சந்தோசத்தை தியாகம் செய்கிறான்.
அவன் மகளுக்காக மற்றும் சகோதரிக்காக

தன் எதிர்காலத்தை வங்கிகளில் கடன் வாங்குவதன் மூலம்
தனிமையில் கடனாளியாய் உருவாகிறான் ஆனால்

அதை அவர்களுக்காக திருப்பிச் செலுத்த தன் வாழ்நாள் முழுதும்
தியாகம் தானே
அவன் தன் மனைவியின் ஆசைகள் மற்றும் குழந்தைகக்காக
படிப்பு, திருமணம் என

எந்தவித குறையும் இல்லாமல் வைக்க தன்னையே தியாகம்
செய்கிறான். அவன்
எத்தனை கஷ்டப்பட்டாலும், தன் தாய், மனைவி, தன் முதலாளி
ஆகியோரின்

இசையை (திட்டுகள்) மன வேதனைகளால் சந்தோஷத்தை
தியாகம் செய்கிறான்.
இவர்களின் கட்டுப்பாட்டுக்குள் சிறைபட்டு இறுதியில்

இவர்களுக்காக(மற்றவர்களுக்காக) வாழும் இவன்
இவனுக்காக வாழ்வதெங்கே.. (கனவில் கூட முடிவதில்லை)
பெண்களே உங்கள் வாழ்வில் ஒவ்வொரு ஆணையும் மதியுங்கள்.
அவன் உங்களுக்காக என்ன தியாகம் செய்துள்ளான் என்பதை
புரிந்து கொள்ளுங்கள்

ஆண்களுக்கும் உணர்வுகள் உண்டு,
அதையும் மதியுங்கள்.

இன்னமும் சொல்லலாம்
இருந்தாலும் இந்த கற்பனையை சொல்லி நிறைவு செய்வோம்

பென்சில்:

என்னை மன்னிக்க வேண்டும்.

ரப்பர்:
எதற்காக மன்னிப்பு ?

பென்சில்:
நான் தவறு செய்யும் போதெல்லாம் நீ சரி செய்கிறாய். ஆனால் ஒவ்வொரு முறையும் நீ தேய்ந்து போகிறாய். என்னால் தானே உனக்கு அந்த பாதிப்பு ?

ரப்பர்:
நீ தவறு செய்யும்போது சரி செய்வதற்காகவே நான் படைக்கப் பட்டிருக்கிறேன். என் பணியை நான் செய்கிறேன்.அதில் எனக்குப் பூரண மகிழ்ச்சியே. எனக்குத் தெரியும்,நான் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து ஒரு நாள் இல்லாமல் போய் விடுவேன்.அதன் பின் உனக்கு ஒரு புதிய ரப்பர் கிடைக்கும்.

இதுதான் வாழ்க்கை .. (பென்சிலை பெண்ணாகவும் ரப்பரை ஆணாகவும் கற்பனை செய்து கொள்க)

ஆண்களுள் பலர், பலருக்கு ரப்பராக இருக்கிறார்கள். வெளியே தெரியாமல்
தியாகத்தின் திருஉருவம் ஆண்களே என்றால் எந்த பெண்களும் வருத்தப்படவேண்டாம். உண்மையை அறிந்து அவர்களை அங்கீகரிக்க கற்றுக் கொள்ளுங்கள்..



# வாழ்க்கை துன்பமயானதா?

கொஞ்சம் relax பண்ணிக்க
நெஞ்சத்தை இங்கு பதிக்கவும்

துன்பமானதா வாழ்க்கை
இன்பமானதா

இதற்கு பதில் என்னவாக
இருக்கும் என நினைக்கின்றீர்கள்

நிச்சயமாக வாழ்க்கை துன்பமயமானதே; இது
நிதர்சன உண்மை

இன்பமும்
துன்பமும் கலந்தது வாழ்க்கை  சரி

கிடைக்கும் சிறிதளவு இன்பத்தில்
கிட்டத்திட்ட அனைவரும் துன்பத்தை மறந்து இருக்கிறோம்

அட அப்படியா என சிந்திக்கும் போது தான்
அந்த உண்மை புரியும்..

“கண்ணிலே நீர் எதற்கு **?**” என
கவிஞரின் பாடலை கேட்டதுண்டோ

“காலமெல்லாம் அழுவதற்கு” என பதிலாக
கண்ணதாசனே சொல்வதும் தெரியும் அன்றோ

குழந்தை பிறந்த உடன் அழவில்லை எனில்

கூடியிருக்கும் அனைவரும் அழ வேண்டும் என்பார் வாரியார்
“செத்தால் அழுகை நிற்கிறது – உடன்
மற்றவர் அழுகை கேட்கிறது.” என

இதனை வாலியும் நயம் பட
இப்படி அழுகையை படம் பிடித்து காட்டுவார்

துன்பத்தைத் துடைக்க முயல்பவர்களும் உண்டு.
துணிவில்லாமல் தோல்வியை அடைந்து வருந்துபவரும் உண்டு

''துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ இன்பம் சேர்க்க மாட்டாயா ?''
என்றும்
''துன்பக்கடலில் நீந்தும்போது தோணியாவது கீதம்'' என்றும்

சுழலவிட பாடல் பல உண்டு
சுக ராகம் சோகம் தானே என்ற பாரதிராசாவின் முதல் மரியாதை
பாடலும்

சொல்வது இது தானே; சரி
சொல்ல வருவதெல்லாம் இது தான்

துன்பமயமானது தான் வாழ்க்கை இதில்
துளியும் மாற்றுக் கருத்து இல்லை

வெயிலில் ''நீண்ட தொலைவு'' செருப்பில்லாமல் நடப்பவர்
விழும் ஆல மர நிழலில் ''சிறிது நேரம்'' இளைப்பாறுவது போல்
தான் இன்பம்

துன்பத்தை கண்டு
துவண்டு விடவேண்டாம் அதனை எப்படி

தொலைப்பது என்ற
தெருவெல்லாம் தேடி அலைய வேண்டாம்

துன்பத்தை ஏற்றுக் கொள்ள பழகிக் கொண்டால் போதும்
துன்பத்திற்கே துன்பம் ஏற்பட்டு விடும்



# நூல் ஆசிரியரின்

## இந்த புத்தகங்களை ஆன்லைனில்...




**அமேசான்**
**விக்கிமீடியா**
**ஸ்கிரைப்ட் மின் நூலகம்**
**கூகிள் ப்ளே ஸ்டோரில் பெறலாம்.**




**ஆடியோ புத்தகமாக**
**சானல் ஜி யில் கேட்கலாம்**




**இந்த புத்தக கட்டமைப்புக்கு**
**பணம் தரலாம். இது இன்னும் புத்தகம் வெளிவர ஊக்கமளிக்கும்.**









# நூலாசிரியர் பற்றி...

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், இன்று உலக எழுத்தறிவு தினமாக கொண்டாடப்படும் தினத்தில் தோன்றியவர்.



வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். "சித்தாந்த ரத்னா", "திருவருட் செல்வர்", "கைரேகை கலைஞன்" போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார்.

பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிட புத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும். இவருக்கு என்றே ஒரு வாசகர் கூட்டம் இவரை சுற்றி தொடரும்.

சென்னை அரிமா சங்கம், சென்னை சுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெயில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம்.

இவரின் எண்ணக் கருத்துக்களை நூலாக்கி படைப்பதில் பதிப்பாளராக பெருமை கொள்கிறோம்.

–பதிப்பாளர்